*Tan̲avaiciya ūl̲iyan̲*

*Malar 2, ital̲ 26*

*March 03, 1922*

Record no. 148

உ
சிவமயம்
தந்திவிலாசம்— "Oolian"    Regd. No. M. 1509.    "Dhana Vysia ...

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளிவருவது.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௨.    காரைக்குடி    துன்மதி௵ மாசி ௨௰வ    (௩—௩—௧௯௨௨)    இதழ் ௨...

## தனவைசிய மகா நாடு.

நிகழும் பங்குனித் திங்கள் ஒன்றும் நாள்
செவ்வாய்க்கிழமை

## கோவிலூரிற் கூடுகிறது.

சென்ற ஆண்டைக் காட்டினும் இருமடங்கு நகரத்தார்
கூடுவார்களென்பதற்கு அறிகுறிகள் காணப்படுகின்றன.

நடந்த கூட்டத்திற் செய்த தீர்மானங்களையே
உறுதிப்படுத்தல் வேண்டும்.

முன் செய்த தீர்மானத்தை யொட்டி
தாரமிழந்த ௪௰ வயதுக்கு அதிகமானவர் கல்யாணஞ்
செய்துக் கொள்ளக் கூடாதென்று தீர்மானித்தல் வேண்டும்.

பருவமான பெண்களை ஒரு வருஷத்திற்குள் விவாகஞ்
செய்து விடும்படி தீர்மானித்தல் வேண்டும்.

தீர்மானத்தை மீறிய நச்சாந்துபட்டி பெ. ராம.
ராமன்செட்டியாருக்கு விதாயம் செய்தல் வேண்டும்.

இனி ஒருவரும் தீர்மானங்களை மீறுதிருக்குமாறு
செய்து விடல் வேண்டும.

சமூகப்பெருமை காக்கப் பெறல் வேண்டுமானல்
பொறுப்புள்ள கூட்டம் ஒன்றைக் கட்டாயம
நியமித்து விடல் வேண்டும்.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,

Best copy available

# ஹிந்து மதாபிமானி.

பத்திராதிபர்

ஸ்ரீமாந் சொ. முருகப்பசெட்டியாரவர்கள்.

இது சமரச சமய வளர்ச்சியை நோக்கமாகக்கொண்டு, தமிழும் ஆங்கிலமுங் கற்ற அறிஞர்களது வியாசங்களைத் தாங்கிக் காரைக்குடி "ஹிந்து மதாபிமான சங்கத்தி"லிருந்து வெளிவரும் ஒரு மாதப்பத்திரிகை. வருஷ சந்தா உள்நாட்டுக்கு ரூபா. ௧—அ—0 வெளிநாட்டுக்கு ரூபா. ௨—0—0 இப்போதே பதினைந்து ரூபாய்க்குக் குறையாமல் அனுப்புபவர்கட்கு ஆயுள்வரை பத்திரிகை அனுப்பப்படும்.

மானேஜர்,
ஹிந்து மதாபிமானி ஆபீஸ்,
காரைக்குடி.



# நமது பலசரக்குக் கடை.

படித்தவர் படியாதவர் பெரியவர் சிறியவர் செல்வர் சாமானியர் ஆடவர் மகளிர் என்ற எல்லோராலும் விரும்பப்பெற்றுப் படிப்பவர் கேட்பவருக்கு எழுச்சியும் வீரமும் உணர்ச்சியும் உண்டாவதற்கு இலக்கியமாக, அஞ்சாநெஞ்சனால் எழுதப்பட்டு ஊழியனில் வெளிவந்த "பலசரக்குக்கடை." ஊழியனில் வெளிவராத பல புதிய விஷயங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. உயர்ந்தகாகிதம்! அழகான வேலைப்பாடு! சொற்பப் பிரதிகளே அச்சிடப்படுகின்றன. முந்துங்கள்!

விலை அணா 0—௩0—0 தபாற்கூலி வேறு.

இந்தியன் ஸ்டோர்ஸ்,
காரைக்குடி.



ரகசியம்வெளியாகிவிட்டது!

# அகஸ்தியர் ரண வைத்தியம்.

தற்காலத்திற்கு ஏற்றது.

சகலவிதமான ரணங்கள், கட்டிகள், பிளவைகள் முதல் சத்தியின்றி உடையவும் ஆறவும் உள்ள களிம்புகள் பிளாஸ்திரிகளும் புரையோடும் ரணம், சொரி, சிரங்கு, கரப்பான், முதலிய புண்களுக்கு எண்ணெய் முதலிய அரியமுறைகள் உண்டு இப்பத்தகம் வைத்திருப்பவர் வைத்தியர்களிடமும் ஆஸ்பத்திரிகளுக்கும் போகவேண்டிய அவசியமில்லை.

விலை அணா 12.

ஆயுர்வேத வைத்ய மந்திரம்,
நெ. 363, பைக்ராப்ட் ரோட்,
ராயப்பேட்டை, சென்னை



# ஸ்ரீபாரதியாரின் நூல்

உ-ம் பகுதி.

(விரைவில் வெளிவரும்.)

சென்ற 4 வருஷங்களில் ஸ்ரீபாரதியார் அருமையாகச் செய்து உற்சாகத்துடன் பாடிக் கொண்டிருந்த சுதேச கீதங்கள் அடங்கியது.

தேசபக்த ஸ்ரீமான் எஸ். ஸ்ரீனிவாஸய்யங்காரவர்களின் அருமையான முகவுரையுடன்.

விலை ரூ 1-0-0.
தபால்செலவு 0-3-0.
வி. பி. செலவு உள்பட 1-7-0.

வெளியூர் புஸ்தக வியாபாரிகளிடம் ரூ 1-2-0க்கு பெற்றுக் கொள்ளலாம்.

காரியஸ்தர்- பாரதிஆச்ரமம்,
2-136 பெரியதெரு. திருவல்லிக்கேணி.


## வலையபட்டி வாலிபர்களுக்கு ஓர் வேண்டுகோள்.

இந்நாட்டில் நமது சமூகஜனங்கள் வசிக்கும் ஊர்களில் ஒன்றான நம்முடைய ஊரிலும் நம் ஜாதியார்வீடுகளும் வாலிபர்களும் அதிகமாக விருக்கிறார்கள். இவ்வூரைக்காட்டிலுஞ் சிறிய ஊர்களிலெல்லாம் வாலிபர்சங்கம் ஸ்தாபிக்கப்பெற்றுச் செவ்வனே நடைபெற்று வருகின்றன. சுமார் ஒருவருடமாக அச்சங்கங்கள் தனவைசிய ஊழியர்சங்கத்தாருக்கு உதவியாகவும் சமூகமுன்னேற்றத்திற்கு உதவியாகவும் வேலைசெய்து கொண்டுவருகின்றன. மேற்கண்டவிஷயத்தை நாமயாவரும் அறிந்திருக்கிறோமாகையால், இனிவரப்போகும் கூட்டத்திற்கு முன்னதாகவே நம்மூர் நகரத்தார்களும் வாலிபர்களும் கூடிக்கவனித்து வேண்டியகாரியங்கள் செய்யவேணும்; கவனியாது விட்டுவிடின் அதுசரியன்று. ஊழியன் இதழ் ௨௪-ல் நமது ஊர்வாசியானகாசிவிஸ்வநாதன் செட்டியார் தெரிவித்திருந்தும் இதுவரை கவனிக்கவில்லை. நம்மூரில் வாலிபர்சங்கமில்லாத காரணத்தால் வ. ராம. லெக்ஷுமணன் செட்டியாரை வேகுப்பட்டி இரத்தினவிலாச வாசகசாலைக்கு அக்கிராசனாதிபதியாக நியமித்து நடத்துகிறார்கள் அதுவும் நமது சமூகநன்மைக்கே ஆயினும், இனிமேல் நகரத்தார்களும் வாலிபர்களும் கவனித்து வெகுவிரைவில் வாலிபர்சங்கம் ஸ்தாபிப்பார்களென்று எதிர்பார்க்கிறேன். எல்லாம் முருகன்றிருவருளால் நடைபெறவேண்டும்.

பெரி. பழ. அண்ணாமலைசெட்டியார்.

## சொக்கநாதபுரம் நகரத்தார்கள் கவனிக்கவேண்டியவை.

சண்முகநாத பட்டணத்தில் கணேசவிலாச வாசகசாலை ஸ்தாபனம் செய்திருக்கிறதைப்பற்றி மிகவும் சந்தோஷமடைந்தேன். நம் ஊரில் பெரியார்கள் அனுமதியில் வாலிபர்கள் முயற்சித்துத் தனலெட்சுமி விலாச வாசகசாலை என்ற ஓர் சங்கம் ஸ்தாபித்து நீடூழிகாலம் நடைபெற்று வருமாறு ஸ்ரீ சிவசுப்பிரமணியக்கடவுள் அருள்புரிவாராகுக. நிற்க, கிழக்குத் தெருவிலிருக்கும் ஊருணியைச் சுத்தம் செய்து புதுப்பித்து ஜலம் அருந்துவதற்கு உபயோகமாக்க வேணுமென்றெண்ணி ஸ்ரீமாங்களான ஆக. ஆ. ஆதியாஞ்செட்டியார், கண. மு, முத்துக்கருப்பஞ்செட்டியார், சுப. பழனியப்பசெட்டியார் இவர்கள்முயற்சியெடுத்து அதற்காக வேண்டியவேலைகள் நடைபெற்றுவந்தன. அப்பால்ஸ்ரீமாங்களானஷெ செட்டியார்கள் காலஞ்சென்றபடியால் அன்றுமுதலின்றுவரை திருத்தவேண்டியவேலைகளில் முயற்சியில்லாதிருக்கின்றார்கள். கொஞ்சம் கவனித்து ஆகவேண்டிய வேலைகளை முற்றுதல் செய்து வைக்குமாறு அங்குள்ளவர்களிடம் கேட்டுக் கொள்ளுகிறேன். மற்றும், நாளதுவரை முக்கியமான ஒரு விஷயம் கவனிக்கப்படாதிருப்பது யாதுகாரணத்தாலோதெரியவில்லை. நம்மூரில் மற்ற கோவில்களிருந்தும் சிவனகோவில் ஒன்று இல்லாமலிருப்பது அத்தனை சிறப்பன்று. ஆகையால், இனியேனும் இது விஷயத்தைப் பலமுறை எழுதும்படி வைத்துக்கொள்ளாது சிவன்கோவில் கட்டுவித்து மகா கும்பாபிஷேகமும் நடாத்தி வைப்பீர்களென்று நம்புகிறேன். எல்லாம் வல்ல முழுமுதற் பொருளாகிய பரமகருணாநிதியின் பாதகமலங்களைப் பன்முறை பிரார்த்திக்கின்றேன்.

சுப. ஆறுமுகம்.



## தீரயோசித்துச் செய்தலே தீரமாகும்.

சகோதரர்களே!!

எவர் ஒருவர் ஒருவிஷயத்தைத்தீரயோசியாது செய்கின்றனரோ அவர் பின்பு மிகக்கஷ்டமுறுவர். சிலர், முன்கோபங்காரணமாக ஒரு விஷயத்தை யோசியாது வருவது வரட்டும் ஒருகைபார்ப்போம் என்று சொல்லிக்கொண்டு மீசை முறுக்குபவராய் இருக்கின்றார்கள். அவருக்குக் கடைசியில் அவமானமே வெகுமானமாய்க் கிடைக்குமென்பதில் ஆக்ஷேபமில்லை. இதுபற்றிநம்மவர்களில் "பத்து வந்தாலும் பதட்டமாகாது ஐந்துவந்தாலும் அவசரமாகாது" என்று ஒரு நீதிவாக்கியங்கூடச் சொல்வது வழக்கம். எந்த விஷயத்தை மேற்கொண்டாலும் அதற்கு முதலாவதாகப் பொறுமையைக்கைக்கொள்ளல்வேண்டும். பிறகு தீரயோசித்துச் செய்யவேண்டும். எவனொருவன் பொறுமையில்லாதவனாக இருக்கின்றானோ அவனுக்குத் தீரயோசித்துச் செய்யுஞ் சக்தி உண்டாகமாட்டாது. மனிதனுக்குப்பொறுமை சிறந்ததொரு ஆபரணமாகையால் அதனையுடையவர்கள் தமது உயிருக்கே தீங்குவரினும் தீரயோசனைபுரிந்தேதடுக்க நினைப்பர் தவிரத்தற்காலத்தில்கூட மகாத்மா காந்தியடிகள் பொறுமைவேண்டுமென்று இந்திய சகோதரர்கட்கு உபதேசித்திருக்கின்றார். பொறுமையினாலேயே எதைவேண்டுமானாலும் தீரயோசனை செய்து கைக்கொள்ளலாம். ஆகையால் பொறுமையே ஆண் பெண் இருபாலார்க்கும் பூஷணமாகுமென்றும் தீரயோசிப்பதற்குக் காரணமாகுமென்றுந்தெரிகிறது. இன்னும் இதனை ஒரு சிறியவிஷயத்தினாலேவிளக்குவோம்:—ஒரு ஊரில் இரண்டு நண்பர்கள் இருந்தார்கள்; அவர்கள் தமது பெற்றோர்களுக்கு அடங்கி நடப்பவர்கள்; அவர்களில் ஒருவன் ஒருமுறை புத்திமயங்கித் தீயவிஷயத்தில் இறங்கிவிட்டான். இப்படியிருக்கும்போது ஒருதினத்தில் அவனது நண்பன் இவனைப்பார்த்து "நீ என் ஒருமாதிரி வருத்தமாக இருக்கிறாய் காரணமென்ன" என்று வினவினான். அதற்கவன் சரியான விடைபகரவில்லை. பின்னும் பன்முறைவற்புறுத்திக் கேட்டதற்கு, அவன் தான்கெட்டுப்போன விஷயத்தையும் அதனால் நோயுற்ற நிலையையும் சொல்லினன்; அதைக்கேட்டதும் அந்நண்பன் நீ இவ்விஷயத்தால் கெட்டுப்போனதை உன்பெற்றோர்கள் அறிந்தனரோ? என்றுகேட்க அவன் இல்லை என்றான். உன்பெற்றோர்க்குத் தெரிவிக்காவிடின் மிகவும் துன்பப்பட நேரும் என்று சொல்லியும் வேண்டிய புத்திமதிகளைப் போதித்துஞ்சென்றான். பிறகு பெற்றோர்கள் இவ்விஷயத்தை எப்படியோ அறிந்துகொண்டு விட்டார்கள். மற்றும் அவர்கள் இவன் கேட்டதற்கு இவன் நண்பனே காரணமாகுமென்று தீரயோசியாமல் தவறுதலாக நினைத்துப் பிறரிடமுஞ் சொல்லி வருத்தப்பட்டனர். அந்த நண்பனையும் வெறுத்துக்கொண்டிருந்தார்கள். இப்படி யிருக்கும்போது அவன் நண்பனுக்கு இவ்விஷயங்களெல்லாந்தெரிந்தன. உடனே அவன் "இவ்வுலகத்திலே எவன் நன்மை செய்ய எண்ணுகிறானோ அவனுக்குத் தீமை பலவருவது சகஜமேயாகும். நல்லது செய்யினும் சில மனிதர்கள் கெட்டதாகவே பாவிக்கும் குணமுடையவர்களாக இருக்கின்றனர். இக்காலத்தில் தீரயோசிப்பதே துர்லபமாகிவிட்டது. அப்படி யிருப்போருக்கு அவமானம்வருவதுநிச்சயம். எவன் எதனை அநுபவிக்க வேண்டுமோ அவன் அனுபவித்தே தீரவேண்டும். இது கடவுளின் கட்டளையாகும்." என்று தன்மனத்திலே சிந்தித்துக்கொண்டிருந்து விட்டான். வெகுநாட்சென்றபின், பெற்றோர்கள். தம்மகனுடைய நண்பன் காரணனல்லன் என்று தெரிந்து கொண்டு மிகவும் நொந்துகொண்டார்கள் தீரயோசியாமலும் உண்மையறியாமலும் குற்றங்கற்பித்ததை நினைத்து மிக வருந்தினர்கள், ஆகையால் நாம் இவ்விஷயத்தினாலே அறிந்துகொண்டது என்னவென்றால், எந்த விஷயத்தையும் தீரயோசித்தே செய்யவேண்டுமென்பதும் அதற்குப் பொறுமையோடிருக்கவேண்டுமென்பதுமே யாகும். சகோதரர்களே! நாமும் அப்படியேஎவ்விஷயத்தையும் தீரயோசித்துச் செய்யவேண்டுமென்று தெரிவித்துக்கொண்டு இத்துடன் நிறுத்துகிறேன்.

வீரப்பன். புதுவயல்.

## சமூகமிருக்க வேண்டுமாயின் நகரத்தார் கவனிக்க.

அன்புடையவர்களே!

ஊழியன் இதழ் உஅ-ன் தலையங்கத்தில் சமூகம் இருக்குமோ இறக்குமோ என்ற மகுடமிட்டு எழுதப்பட்டிருக்கும் வியாசத்தை யெல்லோரும் பார்த்திருப்பார்களானதால் அதனை யிங்குவிரித்துக் காட்டவேண்டியதவசியமில்லை. நச்சாந்துபட்டியில் சமீபத்தில் நடந்தகல்யாணத்தையுத்தேசிக்கும்போது, இன்னும்ஐந்து மாதங்கழித்துக் கூட்டவேண்டிய மறு கூட்டத்தையிப்போதே கூட்டவேண்டியதாயேற்படுகிறது. நாம் கூடாமல் ரு-மீ வரை சும்மாஇருந்தால் வரவரப்பழசாகிப் போகும். இன்னும் பலகல்யாணங்களும் நடந்துவிடும். இப்படியேபலஆகிவிட்டால் பின்பு ஒழுங்குப்படுத்துவது மிகவும்சிரமமாகும். எல்லா நகரத்தார்களும் இப்போதே கவனித்துப் பங்குனிமீ கூட்டம் நடைபெறும்படி செய்யவேண்டியது மிக அவசியம். எவ்விஷயங்களுக்கும் மாகதவிநாயகர் முன்னிற்பாராக.

பெரி. பழ. அண்ணாமலைசெட்டியார்.

## ஓர் ஐயவினாவுக்குவிடை.

இம்மாதம்௬உ வெளிவந்தஊழியனில், ஓர் ஐயவினாஎன்றதலைப்பின்கீழ் ஓர்யாழ்ப்பாணவாசி எழுதிய விடயங்களை வாசகர்கள் வாசித்திருக்கலாம். அதில், "மகாத்மாவின் உபதேசம், அடுப்பைப்போல ராட்டினமும் இருக்கவேண்டுமென்பதா அல்லது குதிரையைப் போல ராட்டினமும் இருக்க வேண்டுமென்பதா என்று விஷயத்தை நேரில் இருந்து கேட்ட நண்பர்கள் இப்பத்திரிகை வாயிலாகத் தெரிவிக்க வேணுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்" என எழுதியிருக்கிறார். இக்கேள்வி, யானெழுதிய "உபதேசம்" என்னும் வியாசத்திலிருந்து வெளிப்போந்ததால், இவ்வினாவிற்கு நான் சிறப்பாகவும், நேரில் இருந்து கேட்ட நண்பர்கள் பொதுவாகவும் விடை கூறக் கடமைப்பட்டிருக்கிறோம்; ஆதலால், என் கடமையை நிறைவேற்றுகிறேன்.

நான் ராட்டினத்துக்குவமையாகக் குதிரைவண்டியைக் கூறினேன். குதிரைவண்டி சுழலுவது போல, ராட்டினமும் சுற்ற வேண்டுமென்றேன். இவ்வண்ணமே அடிகள் உபதேசித்தார். இதைநானிது ஷு புரட்டாசிமீ ௩௰உ ஊழியனில், "தேவகோட்டையில் மகாத்மாவின் பிரசங்கம்" என்ற அங்கத்தில் 'இந்த ஊரில் ஒவ்வொரு வீட்டிலும் எப்படி ஒவ்வொரு குதிரையிருக்கின்றதோ அப்படியே ஒவ்வொருகைராட்டினமும்இருக்கவேண்டும்' என்ற திருவார்த்தைகளினால் அறிந்துகொள்க. அன்றியும், "ஒவ்வொரு வீட்டிலும் அடுப்பு இருப்பதுபோல ராட்டினமும் இருந்து சுற்ற வேண்டும் என்று மகாத்மா உபதேசித்ததாகப் பலர்சொல்லக்கேட்டிருக்கிறேன்" என்கிறார் ஓர்யாழ்ப்பாணவாசி. இவர் கூறுவதுபோல் தனவணிகரொவ்வொருவர் வீட்டிலும் அடுப்பு இருப்பதுபோல ராட்டினமும் இருக்கிறது. இருந்துபயனென்? சுற்றினலல்லவோ பயனுண்டு. சுற்றுவதற்கு எவ்வாறு அடுப்பை உவமானங் கூறுவது? இது ஒரு வினா? சுற்றுதற்கு, குதிரைவண்டியை உவமானங் கூறினன்றோ பொருந்தும். பலர் சொல்லல்வதந்தி (உண்மையற்றபேச்சு) யன்றோ? அதைநம்பலாமா? அவர்கள் நம்பும்படி மொழியினும், நமது பகுத்தறிவு கொண்டே அறிய வேண்டும். யாழ்ப்பாண வாசியாரே நீரும் நானும் மகாத்மா உபதேசித்ததை நேரிற்கேட்கவில்லை. நீவிர் உண்மையற்ற பேச்சை நம்பி இவ்வாறு எழுதினீர் நான் உண்மைப்பேச்சை (பத்திரிகை கூறுவதை) நம்பினேன். இறுதியில் நம்மிருவர் கொள்கையும் நூல்நூற்றல் வேண்டுமென்பதே. இன்னும் "அடுப்பைப்போல ராட்டினமும் இருக்கவேண்டு மென்பது தான் பொருந்துமே தவிரக் குதிரைவண்டியைப்போல ராட்டினம் இருக்கவேண்டு

மென்பது பொருந்தாது" என அவர் முடிவான அபிப்பிராயத்தையும் தெரிவித்துவிட்டார். திடீரென்று ஒரு செய்கைக்கு முடிவுகட்டுதல் அறிவாளர்க் கழகல்ல. ஒவ்வொரு செய்கையையும் ஆழ்ந்து நடுநிலையோடு சிந்திக்கவேண்டும். ராட்டினத்திற்கு ஒப்பு குதிரைவண்டியா? அடுப்பா? என்பதை ஆழ்ந்து யோசிப்போம். மகாத்மா பொதுவாக நம் நாட்டுக்கு வந்து உபதேசித்தபோது "அடுப்பைப்போல ராட்டினமிருக்க வேண்டும்" என உரைத்திருக்கலாம். யான் "உபதேசம்" என்ற அங்கத்தில் எழுதிய உபதேசங்கள் பலவற்றுள், "காந்தியடிகள் சிறப்பாக நம் சமூகத்துக்குச் செய்த உபதேசம் யாது? நூல்நூற்றலே" எனப்பொறித்துள்ளேன். நம் சமூகத்துக்குச் சிறந்த உபதேசமாயின், "குதிரை வண்டியைப் போல ராட்டின மிருக்க வேண்டும்" என்றார் அடிகள். காலத்தையும் இடத்தையும் ஆய்ந்து நோக்குவோம். மகாத்மா காந்தியடிகள் தேவகோட்டைக்கு வந்த காலையில், அவரைத் தரிசிக்கத் தனவந்தரொவ்வொருவரும் குதிரைவண்டியிற் சென்றிருக்கலாம். அப்பெரியார் "வைசியருக்குக் குதிரை வண்டியில் எத்துணைப் பிரியமுளதோ அத்துணைப் பிரியத்தை நூல் நூற்றலிற் செலுத்தவேண்டும்" என நினைந்து குதிரை வண்டியை உவமைகூறி யிருக்கலாம். இவ்வுவமானத்திற்குற்ற மிருப்பதாகப் புலனாகவில்லை. மேலும், அடிகள் நம்மவர் வீடுதோறும் தவறாது சென்றுபார்த்திருந்தால், யாழ்ப்பாண வாசி கூறியவாறு அடுப்பையும் கூறியிருப்பர்! அதன்பக்கத்துள்ள துடுப்பையும் கூறியிருப்பர் பிரசங்கத்தை மொழி பெயர்த்துச் சொன்னவர் 'அடுப்பு' என்றதற்குப் பதிலாகக் குதிரை என்று சொல்லியிருக்கக் கூடுமென்று நினைக்கிறேன்." என்றுசந்தேகப்படுகிறார். அதை மொழி பெயர்த்துச் சொன்னவர், டாக்டர் ராஜனே. அவர் அவ்வாறு தவறும் மனிதரல்லர். அவர் தவறி மொழிந்திருக்கக் கூடுமென்று நான் சனவிலும் கருதவில்லை.

யாழ்ப்பாண வாசியாரே! இதுகாறும் எழுதியவாற்றால், என் முடிந்த அபிப்பிராயம் குதிரையைப்போல் ராட்டினம் இருக்கவேண்டும் எனபதே. இதையன்றென்று மறுத்துரைப்பாருக்குப் பதிலெழுத என்மனம் இடந்தரும். இதைப்பற்றி நேரில் இருந்து கேட்ட நண்பர்கள் இப்பத்திரிகை மூலம் அறிவிக்க யானும் விரும்புகிறேன். யாழ்ப்பாண வாசியாரே தங்கள் உண்மைப் பெயரை வெளியிடுக.

நா சோ சோமசுந்தரம்,

---

### கல்லுப்பட்டிநகரவைசியப் பிரபுக்களுக்கு ஓர் வேண்டுகோள்.

---

எங்களன்பிற் சிறந்த பெரியோர்களே! நமது ஊரில் நகர சுப்பிரமணியர் கோவிலைப்பிரித்துக் கட்டுவதற்கு இவ்வூர்த்தனவைசிய சங்கத்தில் அங்கத்தினர்கள் முயற்சிசெய்து நகரப்பிள்ளையார் கோவிலில் எ,அ, முறை கூட்டம் கூடினார்கள். அப்படிக் கூடியும் இதுவரையில் ஒன்றும் ஒற்றுமையாகவரவில்லை. எல்லாம் வல்ல எம்பெருமானாகிய முருகக்கடவுள் கிருபையால் இனிமேல் நடைபெறும் கூட்டத்திலாவது இதைப்பற்றி எல்லோரும் சிரத்தைகொண்டு இதில் யாதொரு விவகாரமுமில்லாது மேற்படி கோவிலைக் கட்டுவீர்களென்று நம்பி உங்களை வேண்டிக்கொண்டு சதாகாலமும் கடவுளைத் தியானித்து வருகின்றேன். மற்றும், இவ்வூர் வீதிகள் ஒழுங்கில்லாமையால் வண்டிகள் மோட்டார்கள் முதலியவை வருவதற்கு நிரம்ப சிரமமாகவிருக்கிறது ஆகையால் அதையும் கவனித்து இன்னும் கொஞ்சகாலத்திற்குள் நகரத்தாரவர்கள் ஒற்றுமையோடு சீர்திருத்தம் செய்வார்களென்று நம்புகிறேன்.

அசி. அ. கருப்பஞ்செட்டியார்.

### மகாநாடு அல்லது தொண்ணூற்றுநாற் கூட்டம்.

---

அன்பிற்சிறந்த நண்பர்காள்!

நாட்டுக்கோட்டை நகர வைசியர்களாகிய நம்மவர் முன்னேற்றமடையவெண்ணிச்சுமார் ௯0 வருடமாக் கூடாத கூட்டத்தைச் சிலமுயற்சியால் கூட்டியுள்ளோர். அக்கூட்டத்தில் நகரத்தார் அன்புகூர்ந்து செய்த தீர்மானம் நான்கே. இன்னும் செய்யவேண்டிய அதி முக்கியமான தீர்மானங்கள் பலவுண்டு. அதில் ஒற்றுமைக்கு அடிப்படையாகிய பஞ்சாயத்து மொன்றாகும். இக்கூட்டம் நடைபெற்றதிலிருந்து நம் மரபினரில் சிலருக்கு வருத்தம் பல வேரிட்டிருக்கின்றன வென்பதையும் நம்மவர்களுக்குள் ஒற்றுமை பலமாகஏற்பட்டு வருடா வருடம் கூட்டம் நடைபெறும்படி செய்யாவிடின் நாம் முன்னேற முடியாது என்பதையும் பெரியார் முதல் சிறுபாலர்கள் வரை நன்றாய்த் தெரிந்துகொண்டிருக்கிறோம். தம் சுய நலத்தால் பொதுக் காரியங்களையும் அது சம்பந்தமான ஒற்றுமையையும் கெடுத்து விடவேண்டுமென என்னும் சிற்சிலர் வருடாவருடம் கூட்டம் நடைபெறவேண்டியது அவசியமில்லை யெனவும் ௯0 வருட மாமூலின்படி அவரவர் இஷ்டம் போல் நடப்பதே நலமெனவும் எண்ணுவது சகஜமே. அவர்களைப்பற்றி நாம் குற்றங் கூறாது இப்பேர்ப்பட்ட அறிவினர் நம் வகுப்பில் பிறந்திருக்கின்றார்களே யெனவெண்ணி யிரங்கவேண்டியதே. ஒவ்வொரு வருணத்தவரும் தேவலமென மதிக்கத்தக்கிரியும், ஆதித்திராவிட சகோதரரும், அங்கங்கு சங்கங்கள் ஏற்படுத்தி, அச்சங்க வாயிலாகவே நான் முன்னேறி வருகின்றனர்; அதை உலகானுபவங்கொண்டு தினே தினே பலர் முன்னேறி வரும் இக்காலத்திலும் சிலர் தெரிந்து கொள்ளாதிருப்பதை யென்னென்று நான் சொல்லுவது. ஒரு சமூகத்தைப் பல விதத்தும் பாதிப்பது ஒற்றுமையின்மையன்றோ? அவ்வொற்றுமைக்கு விரோதமாயிருப்பது சுய நலமே. சுயநலமெனில் தன் சொந்த நலத்தையே கருதுதலேயாகும். நம் சமூகத்தை முன்னேறாது தடைப்படுத்தி வந்தது போதியபடி சமூகத்தில் சுலபமாகப் பெண் கிடைப்பாமையும் அதற்குப்பொருள் ஏற்பட்டு உயர்த்திக்கொண்டே வந்ததும் அவரவர் இஷ்டப்படி கண் மூடிக்கொண்டு பொருளை லெக்ஷியமாய்க் கருதாது பயனில்லா வழிகளில் டாம்பீகமாய்ச் செலவிட்டு வந்ததும் இருபாலருக்கும் போதிய கல்வியின்மையும் நாரீமணிகளைச்சரியாய் நடத்தாததும் சமூகத்தைப்பாதிக்கும் பல விஷயத்தில் அவரவர்களிஷ்டப்படி விட்டு விட்டதுமேயாகும். தன் எண்ணத்துக்குமாறாக நடப்பதில் சிறிதும் பின்கொள்ளாத பெண்களும் பங்காளிகள் கூட்டம் ஊர்க்கூட்டம் பத்தூர்க்கூட்டம தொண்ணூற்றுநாற் கூட்டமெனில் எவ்வளவோ அன்பு வைத்து அதில் நடைபெறும் காரியங்களைச்சிரமீதேற்கின்றனர். அவர்கள் கல்வியாளர்களது செய்கையைப் பழக்க முள்ளவர்களை தவிர சிறிதேனும் கல்வியறிவுள்ளவர்களல்ல, அப்படிக் கல்வியறிவில்லாத பெண்மணிகள் காட்டக்கூடியசிரத்தையையும பக்தியையும் உலகானுபவமும் இயற்கை செயற்கை அறிவும் ஏதோ கல்வியும் தெரிந்துகொண்ட நம்மிற்சிலர் சிரத்தை காட்டாதிருப்பதும் கூட்டம் இனிக்கூடாதென வீணைப் பிதற்றித்திரிவதும் நகைப்பிற் கிடமாகுமே தவிர வேறென்ன? அனேக விஷயங்களையும் தெரிந்துகொண்ட பலருள், தெரிந்து கொள்ளாத சிலரும் நன்மையடைவதே பொருத்தமாகும். குதர்க்க எண்ணமும் அகம்பாவமும் சண்டிப்பிடிவாதமும் கொண்டவர்கள் நம்மில் சிலருண்டாயினும். அவர்கட்குத்தெரிந்தவர்களாகிய நம்மவரும் வசப்பட்டு விடுதல்கூடாது; கெடுதியான விஷயங்கள் யாரும்கற்றுத்தராமலும் சொல்லாமலும் சுலபமாய் இடம்பெற்று விடும். நன்மையென்பது அதைப் போலல்லாமல் சுவல்ப சுவல்பமாய்த்தான் இடம் பெறும். அதைஆழ்ந்து அரியவேண்டும். ஒருவிருக்ஷத்துக்கு மூலாதாரமாகிய ஆலம்வித்தில் எவ்வளவோ உண்மையும் நலமும்அடங்கியுள்ளன. அதை ஓர் பறவை கொண்டுவந்து ஒருஇடத்தில் போடுகின்றது. அதுவோ நலங்கருதி அப்படிப் போடவில்லை; அப்படி அகஸ்மாத்தாய் சாப்பிடும்நிமித்தம்எடுத்துவந்துபோடுவதால் ஏற்படும் பிரயோஜனம் பின்தான் தெரிகின்றன. அம்மரத்தினிடத்திருந்து உண்டாகும் விழுதோ அதற்குப் பலவிதத்திலும் உதவியாய் வந்து சேருகின்றது; அதையிருந்த இடம்தெரியாது ஒருவன்வெட்டவேணுமானால் சுலபமாய் வெட்டிவிடலாம். உண்டாக்கவோ மிகநாட்செல்லும். மரத்தைவெட்டுவதற்குக் கோடாலியும் ஆளின்சக்தியும் உதவியாயிருக்கின்றன. கோடாலிகெட்டகாரியத்துக்காகஏற்படவில்லை. ஒருவனுக்கு உள்ள முயற்சியை நல் விஷயத்தில் பிரயோகித்தால் பயன் உண்டு. பூமாதேவியோ மரத்தையும் அதை வேணுமென்று வெட்டி வீழ்த்துபவனையுந்தான் தாங்கிக் கொண்டு இருக்கிறாள். அப்படித் தாங்கிக் கொண்டு இருப்பதால, பூமிக்குக் கௌரவமே. இந்த உபமான உபமேயங்களே மேற்கண்ட விஷயங்களை நன்கு வலியுறுத்தும். ஒற்றுமையை யாரொருவர் விரும்பவில்லையோ அவர்கள் முன்னேற்றத்தை ஒரு சிறிதும் விரும்பாதவர்களும் (கடவுள்) தெய்வம் யிருக்கிறதென எண்ணி அவரிடம் உள்ளன்பாகிய உண்மைப்பக்தி காட்டாதவர்களுமேயாவர். கடவுள் ஒற்றுமையின் வடிவமாகவே யிருக்கிறார். அதைக் கீழ்க்கண்டஉபமானம் நன்குவிளக்கும். ஓர்மெழுகுவத்தி பகலில் சூரியனின் முன் எரிப்பின் யாது பயன், சந்திரனில்லாதசமயம் இரவில் எரிந்தாலே பிரயோஜனமுண்டு. பலவத்தி சேரின் அதைப்பார்ப்பவர்களாகிய பலர் மனத்தையும் கண்ணையும் கவருகின்றன. மெழுகுவத்தி ஒன்று சேருவதால் எவ்வளவு சக்தியுண்டென்பதை இதனால் அறியலாம். அதைப்போல் பலர் ஒன்று சேர்ந்து ஓரிடத்தில்சுத்தமான ஹிருதயத்தோடும் ஆசார சீல ஒழுக்கத்தோடுமிருந்து. ஓரேவார்த்தையாகிய மந்திரத்தைச்சப்தமூலம் உருவேற்றிக்கொண்டேயிருப்பின் அச்சத்தமே உலோகவர்க்கத்தில் வியாபித்து பெரும் அருட் சக்தியை உண்டாக்குகின்றன. இது தான நம்முன்னவர்கள் அறிந்து வெளியிட்டுள்ள உண்மை. இவ்வுண்மையைக்கொண்டே இந்துசமயத்தில் முதன்மையாக விக்கிரக ஆராதனையை வலியுறுத்துகின்றன. இதை சொல்பமா யெண்ண முடியவில்லையன்றோ. இதேபோல், ஒற்றுமை, சரியாயுண்டானால் ஒழிய நம்பொருளையும் ஜாதியையும் நாம் செய்தும் செய்து வருவதுமாகிய பலதர்மங்களையும் காத்துக் கொள்ளவும் அதன் பிரயோஜனத்தை அனுபவிக்கவும முடியாது. ஒற்றுமைக்கு நல்ல நிலமென அறிந்து விதையைப்போட்டுச் சிறுபயனைக் செடி முளைத்துவிட்டால் மட்டும்போதாது அச்செடியை மறைத்துக் கெடுக்கக்கூடியதாக அதற்குப்பக்கத்தில் அதேபோலே உண்டாகியுள்ள கோட்டானாகிய புற்பூண்டுகளை வேரறக்களைந்து செடிக்குத் தண்ணீர்வார்த்துப் பாதுகாக்க வேண்டும். சிறு செடி பெரிதாகிவிடின் பூத்துப் பிஞ்சுவிட்டுக் காய்த்துப்பழுக்கும், இதை ஒவ்வொருவரும் அறிவோம். அதேபோல் ஒற்றுமை ஆரம்பமாக ஏற்பட்டது இல்லாததாகிவிட்டால் பலவிதக்கெடுதியும் இடையூறுமே யுண்டாகும். அதைப் பார்த்துப் பல ஜாதியினர் எள்ளி நகைப்பர். அப்படியுண்டாகுமிடையூறுகளில் பொருள்சம்பந்தமானதே முதன்மை. நம்மவர் பொருளெல்லாம் பெரும்பாலும். அன்னியதேசத்திலும் மற்ற உள்நாட்டிலுந்தானிருக்கின்றன. அதை அனேகரிடம் உண்மையாக நம்பி. ஒரு முழச்சம்பளச் சீட்டு எழுதிக் கொண்டுதான் கொடுத்துவைத்துள்ளோம். அவர்கள் மனந்தொட்டுப் பதிலுக்குச் செல்பவரிடம். கணக்குகளை எழுதிக் கொடுத்தோ நம்மிடந்தந்தோதானே வாங்க வேண்டும். சமீபத்தில் நடந்த தொண்ணூற்றுநாற்கூட்டத்தில் ஆரம்பமாக ஜாதிக்கு முக்கியமாக வேண்டியதற்குச் செய்த தீர்மானமே லெக்ஷியமில்லாதெண்ணி ஆட்டத்தில் வந்திருக்கும் போது மற்ற எதுதான் நிலைக்கப் போகின்றது. சத்திய மென்பதை இதுவரை பெரும்பாலும் தெய்வமாகவும் உறுதியாகவுமே நம்மவர் எண்ணி வந்தனர். சிலர் அதை வாய்ப்பேச்சுத்தானே யென்று யெண்ணி பெருத்த விஷயத்திற்கும்பொய்ச் சத்தியம் செய்ய வெளிவந்துவிட்டனர். சத்திய மென்பதுயெப்பொதுவிஷயத்திலும் விலக ஆரம்பித்து விட்டதோ அப்போதே சகல நலங்களும் விலக ஆரம்பித்து விடுமென்பது நிச்சயம். ஆதலால், சமரசமான நிலையிலுள்ளவர்களைக்காட்டிலும். சிறப்புமுறையில் பொருளாளர்கள் ஈன் தொண்ணூற்றுநாற்கூட்டத்தையும் அதன்வாயிலாக வெளிவரும் தீர்மானத்தையும் பாதுகாக்கவும் உண்டாகிய ஒற்றுமையை விர்த்தியாக்கவும் இயன்றவரை முயற்சி யெடுத்துக் கொண்டு பாடுபடவேண்டும். சமீபத்தில் தீர்மானத்துக்கு விரோதமாக நடந்த கல்யாணத்தினால் சமூகத்திலுண்டாகியிருக்கும் புதிய சக்தியையும் மாறுதலாகிய எண்ணங்களையும் உத்தேசித்து இந்தமாத முதலே பிரசாரஞ் செய்து அனேக பிரமுகர்களின் வாக்குறுதி பெற்று அடுத்தபங்குனிமீ கூட்டப்போகும் கூட்டத்திற்குப் பெரியார்களோடு வாலிபர்களும் வந்து உதவி செய்தல்வேண்டும். அவர்கள் தான் வருங்காலத்தில் அனேக நலங்களை யெல்லாம் அனுபவிக்க வேண்டியவர்கள் நடைபெறும் கூட்டத்தில் பேசவேண்டிய விஷயம் முன்நடந்த தீர்மானமாகிய பெண் தொகைக்குப் பதிலாகச் செலவு வைத்திருப்பதைப்பற்றியேயாகும் அதை யெப்படிச்செய்துவிடின் ஒருவரும் மீறி நடக்கமுடியாதோ அப்படித் தீர்மானத்தைச்செய்துவிடவேண்டும். கோவில்காரர்களிடம் அதிகாரத்தைக் கொடுத்துவிட்டுப் பொதுஜனங்கட்கு இனி இடையூறண்டாவதைப்பார்த்துக் கொண்டிருக்க முடியாது. உலகத்தில் பெரிய பிரிட்டிஷ் ராஜாங்கமும் பார்லிமெண்டாலேதான் ஆட்சி செய்யப்படுகிறது. இதோ ஒவ்வொருவரும் சுதந்தரமடைய வேணுமென இச்சிக்கும் காலம். நமது சமூகத்துக்குப் பங்குனிமீ கூடியே ஓர் பரிசோதனைத்தினமாகும். பகீரதப்பிரயத்தனத்தால் குறையாகிய நோயை விலக்கி ஒற்றுமையாகிய பயிரை வளர்த்து நம்மரபை அபிவிர்த்தியோடு மேன்மையடையச்செய்யும்படி நமது சமூகத்திலுள்ள ஒவ்வொருவரையும் மிக்கவினயபூர்வமாகப் பன்முறை நமஸ்காரம் செய்துகேட்டுக்கொள்ளுகிறேன்.

சு. பழநியப்பா.

---

### இராயவரம் நகரத்தாருக்கு ஓர் விக்ஞாபனம்.

இவ்வூருக்குத் தபால் தந்தி ஆபீஸின் வசதி அதிகமாகவேண்டுமென்று முன் ஒரு முறைநான் எழுதியும் இதுவரையில் ஒருவரும் கவனிக்கவில்லையென்று தெரிகிறது. நமது ஊரில் வேண்டியசௌகரியத்தையடையும்படி செய்துகொள்ளாமல் எல்லாவற்றுக்கும் இராமச்சந்திரபுரம் ஏன் செல்லவேண்டும்? தபால் தந்திவிஷயத்தில் நாமிருக்கும் அலக்ஷியத்தைக்கண்டுதான் முன்னொரு முறை நம்மூருக்கு வந்த இன்சூரத்தைக்கூட ராமச்சந்திரபுரம் போய் வாங்கும்படி செய்துவிட்டார்கள். தபால் தந்திஆபீஸ்கள் நம்முடைய சௌகரியத்திற்கேயன்றி நாம் அவதிப்படுவதற்கு அல்ல. ஆதலால் இவ்விஷயத்தில் நம்மவர்கள் ஒத்துழைத்துப் பிராஞ்சாபீசைப் பெரிதாக்கவும் தந்திஆபீஸ் ஏற்படுத்தவும் காரியசித்தியடையவேண்டியது. சிறு விளக்குக்கும் தூண்டுகோல் அவசியம் அதுபோல் ஷை விஷயங்களுக்கு முயற்சி மிக அவசியம். இனிமேலாவது நகரத்தார்கள் தீவிரமான முயற்சி செய்து வேண்டும் சௌகரியங்களை அடையும்படி விக்ஞாபனஞ் செய்து கொள்ளுகின்றேன்.

சேதுராமன்.
பவுண்டை



Best copy available

# பொது வர்த்தமானம்.

சிங்கப்பூர்க் கடிதம்:—இவண் தைப்பூச மகோற்சவம் மிரம்பச் சிறப்பாக நடைபெற்றது. அங்கு வந்திருந்த அயலூர் நகரத்தாரவர்களுக்கு விருந்துவைக்கும்போது சுத்த போஜனவிருந்தாகவே நடாத்திய இவ்வூர் நகரத்தார்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றேன். இன்னும் நம்மவர்களால் நடாத்தப்பெறும். உற்சவங்களில் விருந்துண்ணச் செய்வதையும் சுத்த போஜனமாகவே நடத்திவைக்க வேண்டுமென்று ராம சிதம்பரம் எழுதுகிறார்.

***

நடனம் மரணமாய் முடிந்தது:—இங்கிலாந்தில் ஓர் இடத்தில் நிகழ்ந்த (பால்) நடனஉவபவத்தில் ஒரு பெண் மாரிக்காலம் என்ற தேவதையின் வேஷம் பூண்டு வெண்பஞ்சால் அழகு செய்யப்பட்ட ஆடையணிந்து நடிக்கும்போது அதில் நெருப்புப்பற்றிக் கொண்டதால் உயிர் துறந்தனள்.

***

பாம்பு கடிக்கு மருந்து:—டு தோலா புகையிலையை ௧௦ தோலா ஜலத்தில் பிசைந்து அந்தச் சாற்றைக் கடியுண்டவனுக்குக் கொடுக்கலாமென்றும், மூர்ச்சையுற்றுக் கிடக்கும்போது வாய் அல்லது நாசிவழியாக உள்ளுக்குச் செலுத்திவிட்டால் டு-நிமிஷத்தில் வாந்தியுண்டாகுமென்றும் அதன் வழியாக விஷம் வெளிவந்து விடுமென்றும் ஸ்ரீ ஞானவதி "கிராமிகள்" பத்திரிகைக்கு எழுதியிருக்கிறார்.

***

சிறுகுழந்தைக்குப் பெரியதண்டனை:- கொழும்பிலுள்ள டாவி ரோட்டில் சில தினங்களுக்கு முன் கூ-வயதுடைய ஒரு சிறுவன் தெருவில் விளையாடியதற்கோ அல்லது டிராம்வண்டியுடன் ஓடினதற்கோ குற்றஞ்சாட்டப்பட்டுப் பிரம்படி தண்டனை விதிக்கப்பட்டானும்! அந்தப் பிரம்படி பத்தையும் தாங்கமாட்டாமல் இருப்பிடம் வீங்கி அதிலிருந்து இரத்தம் வடிந்ததாம். மிகச்சிறுவனுக்கு இப்படித் தண்டனை விதிக்க எப்படி மனம் வந்ததோ தெரியவில்லை.

***

கண்டரமாணிக்கம்:—மாசி மீ ௧௫உ இரவு ௭௨.மணிக்கு ஸ்ரீமது இரத்நேஸ்வர அய்யாவர்கள் தலைமை வகிக்கக் காரைச் சிவனடியார் திருக்கூட்டச் சார்பில் ஒரு கூட்டம் கூட்டப்பெற்றது. பொதுவாக ஜீவகாருண்யத்தைப் பற்றியும் ௧௭உ நடைபெறவிருக்கும் மாணிக்க நாச்சியம்மன் பொங்கலில் கோழிகளைக் கொலை செய்யக்கூடா தென்பதைப் பற்றியும் திருவாளர்களான மு. அருணாசலம் செட்டியார், சுப. முத்தையா செட்டியார், பிச. சுப்பிரமணியன் செட்டியார் ஆகியவர்கள் பேசினார்கள். தலைவர் முடிவுரைக்குப்பின்னர் திருவாளர் வெ. ராம ஆ. சொக்கலிங்கம் செட்டியார் வந்தனோபசாரம் கூற ஸபை கூஉ மணிக்கு நிறைவெய்தியது.

***

காரைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் கொலை மறுத்தற் பிரசாரம்:—நாளிது மீ ௧௫உ ஞாயிற்றுக் கிழமை மாலை டு-மணி முதல் கூ-மணி வரை வெற்றியூரிலுள்ள நாகம்மை யம்மன் கோவிலுக்குப் பக்கத்தில், ஷண்முகநாதபட்டினம் கணேசவிலாச வாசகசாலையாரின் ஆதரவில், திருவாளர்களான ம. ரா குமாரசுவாமிப் பிள்ளையவர்களும் அரு. சோமசுந்தரஞ்செட்டியாரவர்களும் கொல்லாமையைப்பற்றி விரிவாக உபந்நியசித்தார்கள். கோவிலில் பூக்கட்டி வைத்துப் பார்த்ததில் சுவாமியும் குட்டி வெட்டுதல் வேண்டாமென்று உத்தரவு செய்தது. அதனால் அநேகர் ஆடு கோழிகளை அறுக்காது அவைகளைக் கோவிலுக்கே விட்டுவிட்டார்கள். மறுதினம், வில்வநாதபுரம் என்ற திருத்தலமாகிய சீனமங்கலத்தில் மேற்கூறிய வாசகசாலையாரின் ஆதரவில், மாலை கூ-மணி முதல் ௬௨-மணி வரை "இன்பம்" என்னும் மடத்தின் கீழ் அச்சிவ நேசச்செல்வர்களிருவரும் மூலகைப் பக்தியும் ததும்ப மிக உருக்கமாக உபந்நியசித்தார்கள். அந்தப்பக்கத்திலுள்ள ஜனங்களெல்லோரும் அன்பு மயமாக விருக்கின்றார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

***

உலகில் உயர்ந்த வண்ணாரச்சாலை:—ஸான் பிரான்ஸிகோ என்றவிடத்தில் அமைக்கப் பட்டிருக்கும் வண்ணாரச்சாலையானது உலகிலுள்ள ஷேசாலைகளி லெல்லாம் உயர்ந்தநிலையில் காணப்படுகிற தென்றும், ந௦-ஆயிரம் பவுன்செலவிட்டுக் கட்டப் பட்டதென்றும் விஸ்தாரமான பலவிடங்களையும் நெருப்புக்குப் பயமில்லாதநிலைமைகளையும் உடையதாயிருக்கிறதென்றும் வாரத்துக்கு லட்சம் பவுண்டு பெறுமான சோப்புக்கள் இங்கு உபயோகிக்கப் படுகின்றன வென்றும் வெளுக்கும் இயந்திரங்கள் இதில்பலவுள்ளனவென்றும் அந்நிய தேசவர்த்த மானத்தால் தெரிகின்றோம்.

***

கோப்பனாபுரி:—துன்மதி ஞுல மாசி மீ ௧௩உ இவ்வூர் விவேகாநந்த வாசகசாலையின் சார்பாக சிவராத்ரியாகிய இன்றிரவு உலககுகர் ஸ்ரீமான் பழ. சிவராமன் செட்டியார் தலைமையின்கீழ் ஐந்தாவது கூட்டம் நிகழ்ந்தது. அவ்வமயம் வைசியர்களில் ஸ்ரீமாந் பழ. சிவராமச் செட்டியார் சிவராத்திரி மகிமை, விருத்தகுமார பாலரான சரித்திரம் என்பவைகளையும் சுப. முத்தையா செட்டியார் "வாய்மையையும்" ராம. காசிவிஸ்வநாதன் செட்டியார் "கல்வியையும்" பழ. அ. நடராஜச் செட்டியார் "வியபிசாரம்" என்பதையும் பெரி. லெட்சுமணன் செட்டியார் "தர்மத்தையும்" மு. திருப்பதி, அ. இராமநாதன் என்ற இருவர் "கொலை மறுத்தல்" சம்பாஷணையையும், மு. இராமநாதச்செட்டியார் 'விபூதி மகத்துவத்தையும்' ராம. நடராஜன் செட்டியார் "அன்பு" என்பதையும், கும. முத்துக்கருப்பச் செட்டியார் "உருத்திராக்க மகிமையையும்" முறையே அழகுற உபந்யசித்தனர். பின்னர் தலைவரவர்கள், தக்க முடிவுரை கூறச்சந்தன தாம்பூலம் வழங்கப்பெற்றுச் சபை இனிது நிறைவெய்தியது என்று உபகாரியதரிசி ராம. காசிவிஸ்வநாதன் எழுதுகிறார்.

***

இந்தியவாலிபர் சங்கம் கொழும்பு:—இன்று மாலை ௩-மணி யளவிவில் கடற்கரைத்தெருவில், புதுக்கதிரேசன்கோவிலில்இந்திய வாலிபர் சங்கச்சார்பில் அழ, மெசு. சாமிநாதஞ்செட்டியார், ராம. சாத்தப்பன், வயி நடராஜன் பழ. சபாபதி கு. ம. சுப்பய்யா, மு. காசிவிஸ்வநாதன் லெ. வயிரவன் என்றவர்கள் முறையே கற்பு, ஒற்றுமை, ஆறுவதுசினம், ஆலய தரிசனம், நட்பு, தருமம் சுத்தம் என்ற விஷயங்களை வெகு தெளிவாயும் இனிமையாயும் உபந்நியாசித்தார்கள். பல பெரியோர்களும் பால்யர்களும் குழுமியிருந்தார்கள். சுமார் கூ-மணிக்குத் தேவாரம் பாடப்பெற்று விபூதிப்பிரசாதம் வழங்கப் பெற்றுச் சபை இனிது நிறைவெய்தியது என்று ராம. சாத்தப்பன எழுதுகிறார்.

---

## மோட்டார்கள் மோதிக்கொண்டன.

நாளது மீ ௧௬உ திங்கட்கிழமை காரைக்குடி அம்மன்கோவிலுக்குத் தெனபுறமாய்ச் சந்தைக்குப்போகும்வழியும், முதலியுள்ள பாலமும் எப்போதும் பொதுஜனங்களுக்கும் வண்டிகளுக்கும் சங்கடத்தையே கொடுக்கின்றன, பலர் பலமுறை இவ்விஷயங்களைப்பற்றி யெழுதியும் யூனியன் மோர்ட்டாரால் கவனிக்கப்படவில்லை. இச்சந்தில் காசுக்கடையோரமாய் நேருக்கு நேராக வந்த இரண்டுகார்கள் மோதிக்கொண்டு (மட்கார் முதலிய) சில சாமான்கள் சேதமடையப்பெற்றன. அந்தச்சமயத்தில் வழியிற் சென்றவர்களுக்கு ஆபத்து நேராமலிருந்தது தெய்வச்செயலே. இனிமேலாவது சந்தைக்குச்செல்லும் பாரவண்டிகளை வேறுவழியிற் செல்லும்படி செய்து பாலத்தையும் கவனித்து ஜன சௌகரியத்தைக் கவனிப்பார்களென்று நம்புகிறேன்.

நேரிற்கண்டோன்.



தனவைசிய ஊழியர் சங்கம் காரைக்குடி

### முதற் பகுதி.

மகிபாலன்பட்டி

மாசி மீ சஉஉ காலை நகரத்தார்பலரிடம் கூட்டத்திற்கு வரவேண்டுமென்பதைப்பற்றிச் சொன்னார்கள்.

ஆ தெற்கூர்.

சஉஉ மாலை இங்குவந்து நகரத்தாரிடம் சொன்னார்கள்.

நேற்குப்பை.

சஉஉ இரவு இவ்வூர் வந்து நகரத்தார் பலரிடம் விஷயத்தைச் சொன்னார்கள்.

பரியாமர் பட்டி.

௧௩உ காலை இவ்வூருக்கு வந்துநகரத்தாரைக் கண்டு பேசினார்கள்.

ஆவினிப்பட்டி.

௧௫உ இவ்வூர் ஸ்ரீமீனம்பிகைவாசகசாலையில் திருவாளர் பெ. பெரி. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் தலைமையில் திருவாளர்களான அ. சிதம்பரம் செட்டியா ரவர்களும் சு. பழனியப்பா அவர்களும் உபந்யசித்தார்கள்.

குருவிக்கோண்டான்பட்டி.

௧௫உ மாலை திருவாளர் பெரி. மு. நாராயணன் செட்டியாரவர்கள் அக்ராசனத்தில் திருவாளர் களான அ சிதம்பரஞ் செட்டியா ரவர்களும் மு. பழ. பழனியப்ப செட்டியாரவர்களும் சு. பழநியப்பா அவர்களும் உபந்யசித்தார்கள்.

### இரண்டாம் பகுதி.

மானகிரி.

மாசி மீ ௧௪உ காலை ஸ்ரீமாங்களான பிச. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும் அமராவதி புதூர் வெ. ராம. ஆ. சொக்கலிங்கம் செட்டியாரவர்களும் சுப. முத்தையா செட்டியாரவர்களும் மு. அருணாசலம் செட்டியாரவர்களும் சென்று நகரத்தார்களிடம் சொன்னார்கள்.

பிள்ளையார் பட்டி.

௧௪உ மாலை மேற்கண்ட நான்கு நண்பர்களும் வந்து நகரத்தார் களிடம் சொன்னார்கள்.

சிறுவயல்.

௧௪உ மாலை மேற்படி நால்வரும் சென்று நகரத்தார் களிடம்விஷயத்தைச் சொன்னார்கள் இரவு அமணிக்கு ஸ்ரீமாந் மு. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் தலைமையில் நால்வரும் உபந்ய சித்தார்கள் பத்து மணிக்கு ஸபைஇனிது நிறைவெய்தியது.

நாச்சியார் புரம்.

௧௫உ காலை ஷையார்கள் அங்கு சென்று நகரத்தார் பலரிடம் சொன்னார்கள்.

கண்டரமாணிக்கம்.

௧௫உ மத்யானம் ஷையார்கள் சென்று நகரத்தார் பலரிடம் சொன்னார்கள்.

பட்டமங்கலம்.

௧௫உ மாலை மேற்படியார்கள் சென்று நகரத்தார் களிடம் விஷயத்தைச் சொன்னார்கள்.

கல்லல்.

௧௬உ காலை மேற்படி நால்வரும் வந்து நகரத்தார் களிடம் விஷயம் சொன்னார்கள்.

அமராவதி புதூர்.

௧௭உ காலை பத்து மணிக்கு நகரத்தாரைக் கண்டு பேசினார்கள்.

### மூன்றும் பகுதி.

நேமத்தான்பட்டி.

மாசி மீ ௧௬உ. பகல் ௧௦ மணிக்கு திருவாளர்களாகிய வயி. சு. ஷண்முகஞ்செட்டியாரவர்களும் சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்களும் சிவ. ராம. ராமசாமி செட்டியாரவர்களும் ராய. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களும் நகரத்தாரிற் பலரைக் கண்டு பேசினர்.

கானாடுகாத்தான்.

௧௬உ பகல் ௧ மணிக்கு மேற்கண்டவர்கள் இவ்வூர் வந்து நகரத்தாரிற் பலரைக் கண்டு பேசினர்.

பள்ளத்தூர்.

௧௬உ இரவு ௬௨ மணிக்கு இவ்வூர் சிவன் கோவிற் பிரகாரத்தில் பள்ளத்தூர் திருவாளர் பெரி. சித. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் தலைமையில் திருவாளர்களாகிய சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்களும் ராய. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களும் வயி. சு. ஷண்முகஞ் செட்டியாரவர்களும் சொ. அழ. அழகப்ப செட்டியாரவர்களும் சொற்பெருக்கிட்டார்கள்.

லெட்சுமிபுரம்.

௧௭உ காலை ௬ மணிக்கு திருவாளர்களாகிய வயி. சு. ஷண்முகஞ் செட்டியாரவர்களும் ராய. சொக்கலிங்கஞ் செட்டியாரவாகளும் சிவ. ராம. ராமசாமி செட்டியாரவர்களும் சேவு. மெ மெய்யப்ப செட்டியாரவர்களும் இவ்வூர் வந்து நகரத்தாரிற் பலரைக்கண்டு பேசினர்.

கோத்தமங்கலம்.

௧௭உ பகல் ௧௧ மணிக்கு மேற்கண்டவர்கள் இவ்வூர் வந்து நகரத்தாரிற் பலரைக்கண்டு பேசினர்.

### நான்காம் பகுதி.

சக்கந்தி.

௧௪உ மாலை இவ்வூர் நகரத்தாரைக்கண்டு பேசினார்கள்.

நாடரசன்கோட்டை.

௧௩உ இரவுதிருவாளர் கண. உல இராமஸ்வாமிசெட்டியாரவர்கள் தலைமையில் வேதாந்தமடத்தில் ஒரு கூட்டம் கூடியது. திருவாளர்களாகிய மெ. சாமிநாதன் செட்டியாரவர்களும் ராம. கருப்பன்செட்டியாரவர்களும் சா. சொக்கலிங்கம் செட்டியாரவர்களும் உபந்யசித்தார்கள்.

காளையார் மங்கலம்.

௧௪உ காலை இவ்விடம் நகரத்தாரைக்கண்டு பேசினார்கள்.

### ஐந்தாம் பகுதி.

வி. லெட்சுமிபுரம்

மாசி மீ ச௦உ மாலை ௭௨ மணிக்கு சிவன்கோவில் கொட்டகையில் ஸ்ரீமான். வ. சு. சு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் தலைமையில் திருவாளர் சி. பெ. கா. பெரியகருப்பன் செட்டியாரவர்கள் சொற்பெருக்கிட்டார்கள்.

விரையாச்சிலை

௧௧உ பகல் ௧௧-மணிக்குத்தனவைசியவாலிபர் சங்கத்தில் திருவாளர் அ. பழ. பழனியப்பசெட்டியாரவர்கள் தலைமையில் ஸ்ரீமான்களான வெ. லெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்களும். வ. சு. சு. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும், சி.பெ.கா. பெரியகருப்பன்செட்டியாரவர்களும், சொற்பெருக்கிட்டார்கள்.

நச்சாந்து பட்டி.

௧௧உ இரவு௭௨மணிக்குப்பள்ளிக்கூடத்தில் திருவாளர்களான சி. பெ. கா. பெரியகருப்பன் செட்டியாரவர்களும் வ.சு.சு. சுப்பிரமணியன்செட்டியாரவர்களும், சொற் பெருக்கிட்டார்கள்.

பனையப்பட்டி.

௧உஉ பகல் ௩-மணிக்குப்பள்ளிக்கூடத்தில் திருவாளர் கரு.பெரி.முத்தய்யா செட்டியா ரவர்கள் தலைமையின் கீழ் சி. பெ. கா. பெரியகருப்பன்செட்டியாரவர்களும் வ. சு. சு. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களும் சொற் பெருக்கிட்டார்கள்.

கூழிபிறை.

௧உஉ மாலை௭௨மணிக்குப் பள்ளிக்கூடத்தில் திருவாளர் ஆ.செ. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் தலைமையின்கீழ், வெ.லெ. சோமசுந்தரம்



நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேச ரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி மாசிமீ உ௦௨

## கட்டுப்படுத்தும் முறை.

நடந்தமகா நாட்டிற் கட்டுப்படுத்து தற்குச் செய்யப்பெற்ற சிலமுறைகளைத் திருத்தியமைக்க வேண்டுவதுதான் பங்குனிக்கூட்டத்தின் முக்கிய வேலையாகும். நடந்தகூட்டத்திலே "அதிகத்தொகை வாங்கினாலும் கொடுத்தாலும் அவரவர்களிடம் ஏற்பாட்டுக்குமேற்பட்ட தொகைக்கு ஆறுமாதத்திற்குள் மாப்பிள்ளை வீட்டுக்காரரிடமும் பெண்வீட்டுக்காரரிடமும் ஒட்டிக்கிரட்டியாகத் தொகை கொடுத்த தேதிமுதல் ஒன்று வட்டி வீதம் சேர்த்து அவ்வூர் நகரத்தார் வசூலிக்கிறது; அதற்குக் கட்டுப்படாவிட்டால் அவ்வூர் நகரத்தார் நகரமுறைப்படி செய்து அவரவர் கோவில் வாசலுக்குத் தெரிவிக்கிறது" என்று காணப்பட்டது. அப்பொழுது இந்தத்தீர்மானம் மிகச் சிறந்ததாகவே தோன்றியது. அநுபவத்திற் பார்க்கும்பொழுது கட்டுப்படுத்தும் முறை இப்படி இருப்பதாற்றான் திடீரென்று மகாநாடுகூட வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. முன்னே செய்யப்பெற்ற ஏற்பாட்டால் சரியானபடி கட்டுப்படுத்த முடியவில்லை யென்பதை இப்பொழுது உணர்ந்து விட்டோம். ஒவ்வொன்றிற்கும் மகாநாடு கூடுதல் என்பது அசாத்தியமான காரியம். இனி ஒருவரும் மீறுகிறதுக்குமாறு தக்கபடி ஆராய்ந்து முடிவுசெய்யவேண்டுவதே நம்முடைய மாநாட்டின் முதற்பெருங் கடமை. "அதிகத்தொகை வாங்கினாலும் கொடுத்தாலும் ஒட்டிக்கிரட்டி வசூல்செய்தல்" என்ற தீர்மானப்படி, வாங்கினது கொடுத்ததை ருஜுப்படுத்த முடியாதென்று அநுபவத்திற் றோன்றியதால், அதற்கு உண்மை சொல்லச் செய்வதைத் தவிர வேறுசெய்வதற்கில்லையென்று கருதி அநேகம் ஊர்களில் ஊர்நகரத்தார் உண்மைகேட்டுக் கொண்டார்கள். தீர்மானம் வேறுவழியாக விருந்தாலும், சமூக நலங்கருதிப்பலவூர் நகரத்தார்கள் நடந்து கொண்ட முறையைப் பின்பற்றியே நச்சாந்துபட்டி நகரத்தாரும் திருவாளர் பெ. ராம. ராமன் செட்டியாரிடம் உண்மைகேட்கமுயன்றனர். அதற்கு இணங்காது அவரைச்சார்ந்த பங்காளிகள் அவரோடு சேர்ந்துகொண்டனர். பிறகு "அவ்வூர் நகரத்தார் நகரமுறைப்படி செய்கிறது" என்ற தீர்மானத்தை அநுட்டிக்கக் கட்சிப்பட்டுவிடும் என்று எண்ணி நச்சாந்துபட்டி நகரத்தார் பின்வாங்கிவிட்டனர். "கோவில்வாசலுக்குத் தெரிவிக்கிறது" என்ற தீர்மானப்படி நச்சாந்துபட்டி நகரத்தார் கோவில்வாசலுக்குத்தெரிவித்தனர். அது பயன்பெறாது, நமது சமூகம் தோன்றியது முதற் காணப்படாத புதுமைகளோடு தொண்ணூற்றாறூரார்க் கூட்டத்தீர்மானத்தை மீறிக்கல்யாணம் நடந்துவிட்டது. ஆகவே கட்டுப்படுத்துதற்காகச் செய்யப்பெற்றமுறை யொன்றும் அநுபவத்திற்பயன்றரவில்லை. தொண்ணூற்றாறூரார்க் கூட்டத்தீர்மான விஷயமாக நாம் இப்படி அபிப்பிராயப்படுவதை நேயர்கள் தவறாக உணர்ந்துகொள்ள மாட்டார்கள். எந்தக்காரியமும் பின்னே நடக்கப் போகின்றவைகளைப் பூரணமாக அறிந்து செய்வதென்பது உலகத்தில்யாருக்கும் அசாத்தியம். முன்னே அந்நிபந்தனைகள் அமையுமென்று மேன்மைதங்கிய நகரத்தாருக்குத் தோன்றியது. அநுபவத்தில் அது அமையவில்லை. இப்பொழுது அதைத்திருத்தி வேண்டியபடி அமைத்துக்கொள்ளுதல் தவறல்ல. இது உலக வியற்கை. அரசாங்கத்தார்கூட, தாங்கள் செய்யுஞ் சட்டங்களை அநுபவத்திற் கண்டுகண்டு திருத்தியமைத்துக் கொள்ளுதலை நாம் பார்க்கின்றோம். எது பயன்தரவில்லையோ அதைத் தள்ள வேண்டுவதும் எது பயன்தருமோ அதைக்கொள்ளவேண்டுவதும் இன்றியமையாதது. நிற்க, அந்தந்த ஊரார் கேட்பது என்றிருப்பதாற் பல சச்சரவுகள் ஏற்படுகின்றன. சில ஊர்களிலே திருப்பணி கட்டுகின்றார்கள். அங்கு ஒருவர் தீர்மானத்தை மீறுவாராநால், அவரை அந்தஊர் நகரத்தார் கூப்பிட்டு விசாரணை செய்ய ஆரம்பித்தால் அவர் கட்சிகட்டிக் கொண்டு பணியை நிறுத்த முயற்சிப்பாரென்று எண்ணி, விட்டுவிடுகின்றார்கள். மற்ற ஊர்களிலும் ஊர் கட்சிப்பட்டுவிடுமென்று பயப்படுகின்றார்கள். ஆதலால் ஊர் நகரத்தாரிடம் பொறுப்பை விடுதல் பொருந்தவில்லை. கோவில் வாசலில்விட்டுவிடுவதென்றால் இப்பொழுது நடந்தவற்றிலிருந்தே அது வேண்டாமென்று எல்லோரும் கூறிவிடுவீர்கள். ஊர் நகரத்தார், கோவிலார் என்ற இரண்டுமில்லாது கட்டுப்படுத்துதற்கு வேறொரு வழிதான் ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. பொறுப்புள்ளவர்களாக— நியாய நெறி தவறாதவர்களாக— சமூக நலத்திற் பெரிதும் நாட்டம் வைத்துள்ள சிலர் சேர்ந்த ஓர் கூட்டம் ஒன்றைநகரத்தார் ஏற்படுத்தி, அவர்களிடம் சகல பொறுப்பையும் விட்டுவிடுவார்களானால், செய்த தீர்மானத்தின்படி கட்டுப்பட்டு நடக்கும்படி அந்தக் கூட்டத்தார் கவனித்துக் கொள்ளுவார்கள். அந்தக் கூட்டத்தாருக்குத் தொண்ணூற்றாறூர் நகரத்தாரும் சேர்ந்து சர்வாதிகாரமும் கொடுத்து விடல் வேண்டும். கூட்டத்தாருக்கு அதிகாரம் கொடுப்பதில் நகரத்தார் அவநம்பிக்கை கொள்ளத் தேவையில்லை. எல்லோரும் சேர்ந்து நடுநிலை தவறாத—சத்தியம் தவறாத சிலரைத் தாமேஎடுப்பார்கள். அவர்களிடத்தில் பூரண நம்பிக்கை கொள்ளத்தான் வேண்டும். நாகரீகம் வாய்ந்தராஜாங்கங்கள் கூட ஒரு சில கூட்டத்தாராற்றானே ஆளப்படுகின்றன. அல்லாமலும் நமது சமூகத்திற்கு இது புதியகார்யமல்ல. ஆதிகாலந் தொட்டே ஒரு



சிலரைப் பஞ்சாயத்தாராக நியமித்துத் தானே சகல காரியங்களையும் நாம் தீர்த்துக் கொண்டு வந்திருக்கின்றோம். அந்தப்புராதன முறையே யல்லாமல் புதிய முறையல்லவிது. ஒருவர் தீர்மானத்தை மீறுகிறாரென்று அந்தக்கூட்டத்தாருக்குத் தோன்றுமானால் அவர்கள் மனச்சாட்சிக்கு விரோதமின்றி எந்தவிதமான ஏற்பாடும்செய்தற்கு அவர்கட்கு அதிகாரமிருந்தல் வேண்டும். சுருங்கக்கூறுமிடத்து ஒருவர் தீர்மானத்தை மீறி நடக்கின்றாரென்று அந்தக் கூட்டத்தாருக்குத் தோன்றிப்பலவித ஏற்பாடும் செய்து கடைசியாக மாலைகொடுக்கப்படாதென்று காரியக்காரருக்குத்தெரிவிப்பார்களானால், அவர்கள் கட்டளையைமீறி ஒருகால் மாலைகொடுத்தால் அந்தக்காரியக்காரரையும் சேர்த்துத் தள்ளிவைக்கும் அதிகாரம் அந்தக்கூட்டத்தாருக்குக் கொடுத்தல் வேண்டும். அந்தக் கூட்டத்தார் செய்யவேண்டிய முறைகளைப்பற்றிச் சில சட்டங்களும் செய்தல்வேண்டும். அவ்வளவு அதிகாரம் உள்ளகூட்டம் ஒன்று இல்லாவிட்டால் அடிக்கடி மகாநாடு கூட்ட வேண்டுவதுதான். அந்தக்கூட்டம் நியமிக்கும் பொழுது அங்கத்தினர் எடுப்பதில் சச்சரவு மிகுதியும் ஏற்படுமென்பதை நாமறிவோம். எனினும், சமூகப்பெருமை என்றும் உலகில் நின்றுநிலவ வேண்டுமானால், தீர்மானங்கள் செய்தலோடு அமையாது யாவரும் கட்டுப்பட்டு நடக்க வேண்டுமானால், இதைத் தவிர வேறொருவழியிருப்பதாக நமக்குத்தோன்றவில்லை. ஆதலால் எந்தவிதமான சச்சரவுகளையும் உண்டாக்கிக்கொள்ளாமல், சமூகநலம் ஒன்றையே குறிக்கொண்டு நன்மை தரும் காரியங்கட்கு எத்தகைய தீர்மானமும் செய்தற்கு, ஒவ்வொருவர் உள்ளத்திலும் குடிகொண்டுள்ள இறைவன் திருவருள் பூரணமாக விருக்குமென நம்புகிறோம்.

## உள்ளூர்வர்த்தமானம்.

வாசகசாலையின் வருடக்கொண்டாட்டம்:—இவ்வூர் வாசகசாலையின் ஒன்பதாவது வருடக்கொண்டாட்டம் நாளது மீ௳ ௧௩௨ வெள்ளியன்று பகல் ௩மணிக்குத் தொடங்கி நன்கு நடத்தப்பட்டது. சென்னை ஹைக்கோர்ட் ஜட்ஜாகவிருந்த திவான்பகதூர் ஸர். டி சதாசிவஐயர் அக்கிராசனம் வகித்தனர். தலைவரை வரவேற்று மாலையிட்டு உபசாரப்பத்திரம் வாசித்துக் கொடுத்தவுடன், திரிசிரபுரம் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமாந் மு. வேங்கடசாமி நாட்டார் "தமிழின் ஆக்கம்" என்ற விஷயத்தை யெடுத்துக் கொண்டு அதன் தெய்வீகத்தன்மையையும் விளக்கித் தமிழ் நூல்களிலுள்ள நீதி ஒழுக்கம் கைத்தொழில் தவச்சிறப்பு முதலானவைகளை உதாரணவாயிலாக எடுத்துக்காட்டி, அது காலந்தோறும் மாறுபட்ட செய்தியையும் தற்போதிருக்கும் நிலைமையையும் நாம்செய்ய வேண்டிய கடமையையும் திறம்படக்காட்டி உபந்யசித்தார். பின்னர், மகிபாலன்பட்டி வித்வான் ஸ்ரீமான் மு. கதிரேசச் செட்டியாரவர்கள் "மகாகவிகளின் எண்ணங்கள்" என்ற விஷயத்தை மேற்கொண்டு அதன் பொருளையாவர்க்கும் விளங்கும்படி விரித்துச் சொல்லி, குறள் சிலப்பதிகாரம் பெரியபுராணம் முதலிய நூல்களிலிருந்து அரிய பெரிய கருத்துக்களை யெடுத்துக்காட்டி மகிழ்வித்தார்கள். காளிதாஸனுக்கும் முற்பட்ட பாஸகவியின் கருத்துக்களும் கம்பர் கருத்துக்களும் ஒத்துள்ள பாக்களை வடமொழி தென்மொழிக் கவிகளிலிருந்து மிகஅழகுபடப் பொருத்திக் காட்டிவிட்டு முடிவில், தமிழுக்கு ஒருதனியான ஸ்தாபனம் மிக விரைவில் அமைக்கவேண்டுமென்றும், அதன்பொருட்டுத் தனிகர் பலரைக் கண்டு பேசியிருப்பதாகவும், நகரத்தார் இன்னின்ன செய்யவேண்டுமென்றுங் கூறிமுடித்தனர். உடனே, திருக்கோவலூர் ஸ்ரீமாந் ம. ரா. குமாரசாமிப் பிள்ளை "நல்ல நண்பர்" என்பதை விஷயமாகக் கொண்டு பலவகையான உலகியல்காட்டி யாவர்க்கும் விளங்கும்படி கடல் மடைதிறந்த வெள்ளம்போல் உபந்யசித்து முடித்தனர்; அக்கிராசனரின் முடிவுரைக்குப்பின் வந்தனோபசார முதலிய வற்றுடன் இரவு எ மணிக்கு இனிது நிறைவெய்தியது.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸதேவரின் ஜயந்தி:—நாம் முன் இதழில் தெரிவித்தபடியே ஹிந்துமதாபிமான சங்கத்தில் நாளது மீ௳ ௧௩௨ மாலை ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸதேவரின் ௬௦வது பிறந்ததினக்கொண்டாட்டம், இவ்வூர் ஆங்கிலகலாசாலைத் தலைமை யுபாத்தியாயர் பிரம்மஸ்ரீ என். எஸ். வேங்கடராமையரவர்கள் அக்கிராசனம் வகித்தார். திருக்கோவலூர் ஸ்ரீமான் ம. ரா. குமாரசாமிப் பிள்ளையவர்கள் ஸ்ரீபரமஹம்ஸ தேவரின் சரித்திரத்தை

## தந்திச்செய்தி.

பினங்கு மாசிமீ௳ ௧௩௨

| | |
|---|---|
| மதராஸ் உண்டியல் விலை | நூற்று எண்பது. |
| ஈயம்விலை | எழுபத்தொன்று. |
| ரப்பர்விலை | இருபத்தெட்டு. |

சைகோன் மாசிமீ௳ ௧௩௨

| | |
|---|---|
| மதராஸ் உண்டியல் விலை | நூற்றி எண்பத்திரண்டு. |
| சிங்கப்பூர்வட்டம் | மூன்று |

ரேங்கூன் மாசிமீ௳ ௧௪௨

| | |
|---|---|
| நெல் விலை | ௧அ௫ |
| அரிசி விலை | ௪௨௫ |
| புதியவெள்ளை மொச்சை | ௩௦௦ |
| பழய வெள்ளை மொச்சை | ௨௦௧ |
| செகப்பு மொச்சை | ௨௧௦ |
| கடலை | ௪அ௫ |
| உளுந்து | ௫௨௫ |
| துவரை | ௫௨௫ |
| தட்டப்பயறு | ௫௩௫ |
| மொச்சை | ௫௫௦ |
| தவணை வட்டி | பதினைந்து அணா |
| நடப்புவட்டி | ௦ ௧௫ ௩ |
| டவுன்விலை | ௧அ ௦ ௦ |
| பினங்கு உண்டியல் விலை | ௧௫௨ |

அரிசி கொழும்பு, சிங்கப்பூர், கிழக்கு இந்தியத்தீவுகள், ஐக்கியஅரசாங்கம், ஜெர்மனி, முதலான இடங்களுக்கு ஏற்றுமதியாகின்றது.

கடலை, கொழும்பு, சிங்கப்பூர், கல்கத்தா, மதராஸ், முதலிய இடங்களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

௨௰ மணி நேரம் பலவுயர்ந்த மேற்கோள்களுடன் விளக்கினார்; ஸ்ரீராமலிங்க சுவாமிகளிடத்தும் ஸ்ரீராமகிருஷ்ணரிடத்தும் இருந்த குணஞ்செயல்களை நோக்கும்போது அவைகளில் பல ஒத்துவிளங்குந் திறத்தைக்காணலாமென்று கூறிய விஷயங்களும், அக்குணஞ் செயல்கள்யாவும் தற்காலம் மகாத்மாவிடம் பொருந்தியிருக்கின்றனவென்று எடுத்து மொழிந்தமையும் மிகப்பாராட்டற் பாலன. பின்பு தலைவரின் அபிப்பிராயஞ் சொல்லப்பட்டது; வந்தனோபசாரஞ் சொன்னவுடன் சந்தனதாம்பூலம் வழங்கப்பட்டன; உடனே பரமஹம்ஸதேவர் திருவுருவப்படத்தின் திருவுலாக்காட்சி நடைபெற்று முடிந்தவுடன் இரவு ௧௦ மணிக்கு இனிது நிறைவெய்தியது.

(௭-ம் பக்கத்தொடர்ச்சி.)

செட்டியாரவர்களும். சி. பெ. கா. பெரியகருப்பன் செட்டியாரவர்களும் வ. சு. சு. சுப்பிமணியன் செட்டியாரவர்களும் சொற்பெருக்கிட்டார்கள்.

சேவ்வூர்.

கந௨ பகல் ௧௧மணிக்குக்கோவில் வீட்டுக் கட்டிடத்தில் திருவாளர்களாகிய சு. பழநியப்பா அவர்களும் மு. பழ. பழநியப்ப செட்டியாரவர்களும் சொற்பெருக்கிட்டார்கள்.

ராங்கியம்.

கந௨ மாலை ருமணிக்கு ரோஸ்டாபீசின் எதிரிலுள்ள கொட்டகையில் திருவாளர் வழ.நா. நாராயணன்செட்டியாரவர்கள் தலைமையின் கீழ் திருவாளர்களான வ.சு.சு.சுப்பிரமணியன் செட்டியாரவர்களும், அ. சிதம்பரம் செட்டியாரவர்களும் சொற் பெருக்கிட்டார்கள்.

மிதிலைப்பட்டி.

கந௨ இரவுஎ௨.மணிக்குவாலிபர் சங்கத்தில் திருவாளர் கும. பெரி. பெரிய கருப்பன் செட்டியாரவர்கள் தலைமையின்கீழ் சி. பெ. கா. பெரிய கருப்பன் செட்டியாரவர்களும், சு. பழனியப்பா அவர்களும் சொற்பெருக்கிட்டார்கள்.

உலகம்பட்டி.

கசுஉ மாலை ௫ மணிக்குத்திருஞானசம்பந்த சுவாமிகள் வாசகசாலையில் நகரத்தாரவர்களைக் கூட்டிவைத்துக் கோவிலூரில் நடைபெறும் தொண்ணூற்றூர் மகாநாட்டுக்கு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பெற்றது.

மேலைச்சிவல் பட்டி.

கசுஉ மாலை ருஉ மணிக்குத்தனவைசிய பொதுநலச் சங்கத்தின் முன்பாக உள்ள வெளியிடத்தில், திருவாளர் சொ. க. மு. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் தலைமையின் கீழ், வெ. லெ. சோமசுந்தரஞ்செட்டியாரவர்களும், சி. பெ. கா. பெரியகருப்பன்செட்டியாரவர்களும் செ. அ. ராம. முருகப்ப செட்டியாரவர்களும். சொற்பெருக் கிட்டார்கள். தலைவரின் பிரதிநிதியாகத்திருவாளர் மு. குமரப்ப செட்டியாரவர்கள் மிக அழகாக. முடிவுரை கூற எஉ மணிக்குச்சபை இனிது நிறைவெய்தியது.

கோப்பனாபட்டி.

கசுஉஇரவு ௧௦மணிக்கு விவேகானந்த வாசகசாலையில். திருவாளர். ராம. காசிவிஸ்வநாதன்செட்டியாரவர்கள் தலைமையின்கீழ் வ. சு. சு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் சொற்பெருக் கிட்டார்கள். திருவாளர் முத்தையா செட்டியாரவர்கள் தேவாரம் படப்பெற்று கஉ மணிக்குச் சபை இனிதுநிறைவெய்தியது.

பூலாங்குறிச்சி.

கசஉ இரவு கஉ மணிக்கு ராம. ப. வ. கட்டிடத்தில் திருவாளர் வ.ராம. வள்ளியப்ப செட்டியாரவர்கள் தலைமையின்கீழ் வ. சு. சு. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும் சி. பெ. கா. பெரியகருப்பன்செட்டியாரவர்களும் சொற்பெருக் கிட்டார்கள். இரவு கஉ மணிக்குச் சபை நிறைவெய்தியது.

வேகுப் பட்டி.

கடுஉ மாலைசஉ மணிக்கு இரத்தின விலாச வாசகசாலையில் திருவாளர் ராம. குழ. பத்துக்கருப்பன் செட்டியாரவர்கள் தலைமையின் கீழ் வெ. லெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்களும், சி. பெ. கா. பெரியகருப்பன்செட்டியாரவர்களும், வ. சு. சு. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களும். சொற்பெருக் கிட்டார்கள். ௬௨மணிக்குச் சபைஇனிது நிறைவெய்தியது.

புதுப்பட்டி.

கடு௨இரவு ௧௦மணிக்கு நகரமடத்தில் திருவாளர் சு. ப. சி. சு. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள் தலைமையின் கீழ் மேலைச்சிவல்பட்டி சொ. பழனியப்ப செட்டியாரவர்களும், சி. பெ. கா. பெரியகருப்பன் செட்டியாரவர்களும், வ. சு. சு. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களும் சொற்பெருக்கிட்டார்கள். இரவு கஉ மணிக்குச் சபைஇனிது நிறைவெய்தியது.

வேந்தன்பட்டி.

சசுஉ மாலை௫ மணிக்குத்திருவள்ளுவர்வாசகசாலையில் திருவாளராகளான ந. சோமசுந்தரஞ்செட்டியாரவர்கள் தலைமையின்கீழ் வெ. லெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்களும் ராம. ராமநாதன் செட்டியாரவர்களும், சி. பெ. கா. பெரியகருப்பன் செட்டியாரவர்களும் சொற்பெருக்கிட்டார்கள். நிவமணிக்குச் சபைஇனிது நிறைவெய்தியது.

பின்வந்த செய்தி.

நான்காம் பகுதி.

நா. அழகாபுரி.

கடுஉபகல் கஉ-மணிக்கு ஸ்ரீமான்களான கல்லுப்பட்டி மெ. சாமிநாதன்செட்டியாரவர்களும் மேற்படியூர் ராம. கருப்பன்செட்டியாரவர்களும் காரைக்குடி சா. சொக்கலிங்கம் செட்டியாரவர்களும் நகரத்தாரைக்கண்டுபேசினார்கள்.

பனங்குடி.

கடுஉ மாலை சு மணிக்கு நகரத்தாரைக்கண்டுபேசினார்கள்.

நடராஜபுரம்.

கசுஉ காலை அ மணிக்கு நகரத்தாரைக்கண்டுபேசினார்கள்.

வெற்றியூர்.

கசுஉ பகல் கஉ மணிக்கு நகரத்தாரைக்கண்டுபேசினார்கள்.

அரண்மனை சிறுவயல்.

கசுஉ மாலை சு மணிக்கு நகரமடத்தில் ஸ்ரீமான் கரு. உ. உடையப்ப செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில் ஸ்ரீமான்களான மெ. சாமிநாதன் செட்டியாரவர்களும் சா. சொக்கலிங்கம் செட்டியாரவர்களும் ராம. கருப்பன் செட்டியாரவர்களும் உபந்நியசித்தார்கள்.

பாகனேரி.

களஉ மாலை ௬ மணிக்கு நகரமடத்தில் ஸ்ரீமான் ராம. பழ. ராம. ராமசாமி செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில் ஸ்ரீமான்களான மெ. சாமிநாதன் செட்டியார் அவர்களும் சா. சொக்கலிங்கம் செட்டியாரவர்களும் ராம. கருப்பன் செட்டியாரவர்களும் சண. உல. இராமநாதன் செட்டியாரவர்களும் உபந்நியசித்தார்கள்.

சேம்பொன்னார்.

கஅஉ பகல் ஒரு மணிக்கு நகரத்தாரைக்கண்டு பேசினார்கள்.

## மதிப்புரை.

அஷ்டா விம்சதித் தோத்திரப் பிரபந்தம்.

இந்நூலொன்று கிடைக்கப் பெற்றோம். இதில் ஸ்தோத்திர ரூபமான இருபத்தெட்டுப் பிரபந்தங்கள் அடங்கியிருக்கின்றன. சிவனடியாராகிய நாட்டுக் கோட்டை யார்என்னும் இரங்கூன் நகரத்தார் களால் இந்நூல் பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது சிவ பக்தி யுள்ளவர்கள் வாங்கிப் படித்து மகிழலாம்.

## பனி

சென்ற ஞாயிற்றுக்கிழமை காலை ருமணிமுதல் எ மணிவரை இவ்வூரெங்கும் மிக அதிகமான பனிபெய்தது. சமீபத்திலுள்ள வீடுகள் மரங்கள் முதலியன வற்றின் உருவங்களும் கண்ணுக்கு நன்குபுலப்படவில்லை. வெளியிற்போகும் போது சிறியமழைத்துளிபோற் சில விடங்களில் பனித்துளிவிழுந்தன. இதுவரை யிவிடத்தில் இப்படிப்பட்ட பனி பெய்யவில்லையென்று சொல்லலாம்.



## மானிட ஜென்மம்.

அகண்ட பரிபூரண சச்சிதானந்த சிவரூபமாகிய பகவானுலே சிருட்டிக்கப்பட்ட பல வகை ஜன்மங்களிலே மனித ஜன்மமே மிகச்சிறந்ததென்று சகல நூல்களும் கூறுகின்றன. இச் சன்மத்தை நாம் எடுத்துக் கொண்டு வெளியே கிளம்பும் பொழுது தாய்மார்கள் எவ்வளவோ கஷ்டமுறுகின்றார்கள். நாம் பூமியில் ஜனித்த உடனே பிறர் உதவியின்றேல் பிழைப்பதரிதாக முடியும். குழவிப்பருவத்தில் உடகாரவாவது எழுந்திருக்கவாவது கேவலம்நகரக்கூட முடியாது. இருந்தவிடத்திலே மல ஜலங்களைக் கழித்துவிடும்நிலைமை வாய்ந்தமனித ஜன்மங்களுக்குத் தாழ்ந்த ஜன்மங்களாய்க் கூறப்படும் மிருகமாதிகளுக்கோ இத்தகைய நிலைமையில்லை ஓர் மாட்டின் வயிற்றினின்று ஓர் கன்று வெளிவந்தவுடனே யாங்ஙன் சற்றுநேரத்திற்குள் தன் தாயின்பின் சென்று ஸ்தனத்தை யணுகிப் பால் அருந்தச் சக்தியுடையதாகிவிடுகின்றது. தாய் அழைத்தால் அதன் நாமத்தைக்கேட்டுப் பின்பற்றிச் செல்லுகின்றது. உயர்ந்த ஜன்மத்தைக் கொண்ட மானிடக் குழவியோ பிறர் உதவியின்றேல் உயிர் துறக்குமென்பதில் ஐயமில்லை என்னே பரிதாபம்! இவ்விஷயத்தில் மானிட ஜென்மத்தைப் பகுத்தறிவில்லாத மிருகமாதிகளின் தாழ்ந்த நிலையுடையதென்று கூடக் கூறலாம். நிற்க,

அக்குழவிப்பருவமமாறிப் பள்ளிக்குச் செல்லுங்காலம் வந்துவிட்டாலோ, உபாத்தியாயரைக் கண்டால் ஓர் புலியைக் காண்பது போலிருக்கின்றது. வீட்டிலுள்ளோர் இன்றைக்குப் பள்ளிக்குச் செல்லவேண்டாமென்று சொல்லிவிட்டால், அப்பொழுதிருக்கும் சந்தோஷத்தைச் சொல்லி முடியாது. பிறகு சற்று அறிவு விளங்கும் பருவம் வந்தால் நாம் கல்வியில் தேர்ச்சியடையவேண்டுமே கற்றால்தானே பணம் சம்பாதிக்கலாம் என்ற ஓர் கவலையாகிய உணர்ச்சி உண்டாகிறது. பெற்றோர் கல்விகற்று வைக்கச் சக்தியற்றவரா யிருப்பின் அந்தோ! பெருந்துன்பத்தை யடைய வேண்டும். அப்பால் வாலிபப்பருவம் வரும் சமயம் பெரும்பாலும் உலக விஷயங்கள் விளங்கி விடுகின்றன. அப்பொழுது கல்யாணம் செய்துகொள்ள வேண்டும்; புத்திர சம்பத்தையடைய வேண்டும்; நாம் எவ்வழியிற் பணம் சம்பாதிக்கலாம் என்ற பெரிய கவலையுண்டாகி விடுகிறது. இப்படிப் பட்ட ஜன்மத்தை எடுத்தவர்கள் முதுமைக்காலம்வரை அவரவர்க்குரிய தொழில்களைச் செய்து கொண்டே இருந்துவிடுகிறார்கள். சிலர் தான தருமங்களில்தேடிய பொருளைச்செலவிடுகின்றார்கள். சில கருமிகளோ சிறிதேனும் தருமங்களிற் செலவிடாமல் தங்கள் பிள்ளைகளுக்கென்று வைத்துவிட்டுப் பாபமூட்டையைக் கட்டிக்கொண்டு நரகக்குழிக்குச் செல்கின்றனர். அப்பிள்ளைகளோ அப்பொருளையே நிலையென்று நினைத்துக்கல்வியை அவமதித்துச் சோம்பேறிகளாய்த் திரிந்துவிட்டுச் சில காலத்திற்குள்ளே விபசார முதலியவைகளிலே செலவிட்டுப்பின்பு பிழைக்க வழியின்றித் தவிக்கின்றனர். இச்செயலைத் தற்பொழுதும் கண்கூடாகக் காண்கின்றோம். என்னேகண்ணியம்வாய்ந்த புண்ணியசீலர்களே! பாடுபட்டுத் தேடிப்பண்ணின் தப்புதைத்து வைத்துக் கேடுகெட்டமானிடரே கேளுங்கள் கூடுவிட்டிங் காவிதான் போயினபின் பாரே யநுபவிப்பார் பாவிகாளந்தப் பணம். என்றுஔவையாரும் "பிறக்கும்பொழுது கொடு வந்ததில்லைப் பிறந்துமண்மேல் இறக்கும்பொழுது கொடுபோவதில்லை யிடை நடுவிற் குறிக்கு மிச்செல்வஞ் சிவன்றந்ததென்று கொடுக்கறியாதிறுக்குங் குலாமருக்கென் சொல்லுவேன் கச்சியேகம்பனே" என்று பட்டினத்தடிகளும் கூறியிருக்கின்றார்கள். ஆகையால் நமக்கு எப்போதும் தியாகம் வேண்டும். உருக்கம்வேண்டும். வீரம்வேண்டும். செய்கையும்வேண்டும். இச்சென்மம் இருப்பதுபொய்; போவதுமெய்; ஆகையால் நம்முயிர் பிரிவதற்குள் நம்மாலியன்றவரை தான தருமங்களைச் செய்து நல்லபதவியடையவேண்டிய புண்ணியத்தைப் பெறல் வேண்டும். தன்னுயிர் அழியும்போது தேடியபொருள்பின்வரா. சுற்றத்தார்வாரார் புண்ணியம் பாவம் இரண்டுமே தொடரும். மனித ஜன்மத்தையடைந்த நாம் புண்ணியத்தைக்கடைப்பிடித் தொழுகல்வேண்டும்.

அ. ராம. சு. ஸ்ரீனிவாசன்செட்டியார்.

## உலகம்பட்டி.

இவ்வூரில் நகரவைசிய தனவந்தர்களிலொருவராகிய ஸ்ரீமான் கரு. பழ. கரு. நாகப்பசெட்டியாரவர்கள் முப்பத்திரண்டறங்களில் முதன்மை வாய்ந்த கல்வி என்னும் அறத்தைச் செய்ய விருப்புற்று அழகிய கட்டிடமொன்று வேண்டியவளவுக்கு அமைத்து "அதற்கு சேவதானந்த செந்தமிழ்க்கலாசாலை" என்னும் பெயரும் வைத்து அதில் கல்வி கற்கும் மாணவர்களுக்குச் சம்பளமில்லாமல் இலவசமாய் நமது தாய்ப்பாஷையைக் கற்றுக்கொடுக்க முன்வந்திருப்பது ஆரம்பவும் மெச்சத்தக்கது. நிற்க, தற்பொழுது நகரவைசிய தனவந்தர்களில் சிலரும் மற்றும் ஏனைய பிரபுக்களில் சிலரும் தங்கள் தங்களுடைய பொருளுக்கு ஏற்றவாறு நமது தாய்ப்பாஷையை விருத்திக்குக்கொண்டுவராது, இடம்பத்தின் பொருட்டுத் தற்பொழுது நமது கவர்ன்மெண்டார் கொடுக்கின்ற பட்டங்களை நினைத்தும், ஆங்கிலகலாசாலைக் கட்டிடங்களுக்கு மாத்திரம் ஏராளமாயுள்ள பொருளைச்செலவுசெய்து பார்வைக்கு வெகுவிசித்திரமாயலங்கரித்துள்ளது, மக்களனைவர்களும் படித்துய்யுமாறு அவர்களுக்கு வேண்டிய அன்னவஸ்திரங்களும் படிப்பில் ஜாதிவித்யாசமின்றிச் செல்விடாது ஒரு திறத்தாருக்கு மட்டும் சம்பளமில்லாது செய்து வருவனதைப்பார்க்குமளவில் என் மனமானது மிக வருந்துகின்றது. கட்டிடம் இறைவனுடைய குணமகிமையையும் அருளையும் உணர்த்தாது கல்வி ஒன்றே உணர்த்தக்கூடியது. அதிலும் நமது தமிழ் மக்களாகிய சைவசமயத்திலுள்ள சிவபக்தர்களனைவர்களுக்கும் நமது சிவபெருமானுடைய குணமகிமையை உணர்த்துவது நமது தமிழ்க்கல்வியே. எவ்வித பாஷைகளினும் நமக்குத் தமிழ்க்கல்வியே சிறந்ததென்பதும், எளிதில் மோக்ஷத்தை இதனால் அடையலாமென்பதும் நமது சாஸ்திரங்களில் பார்க்குமிடத்து நன்கு புலப்படும். ஆனதால் ஒவ்வொரு பிரபுக்களும், நமது செட்டியாரவர்கள் செய்தவாறே தங்கள் தங்கள் பொருளுக்கு ஏற்றவாறு செய்யும்படி இப்பத்திரிகை மூலமாய் மிகத்தாழ்மையாய்க் கேட்டுக்கொள்கின்றேன்,

சோமசுந்தர தேசிகர்.

Bleed through

## சுத்த உணவு.

நம்மவர்களில் பலர் சுத்தஉணவு உட்கொண்டாலும் இன்னும் பலர் மாம்சவுணவையே யுட்கொண்டுவருகிறார்கள். நம்மவர்களுக்கு எல்லா விஷயங்களிலும் அதிகமான மதிப்பு இருக்கும்போது புலால் உணவினால் சற்றுக்குறைவு ஏற்படுகின்றது. சிலர்கள் மாமிசமில்லாமல் உண்ண முடியாவென்றும் அப்படியிருந்தால் அதிகமான நோய்கள் வருகின்றனவென்றுங் கூறுகின்றார்கள். இவையெல்லாம் வீண் வாதங்களென்றே தள்ளவேண்டும். ஏனெனில் மன வைராக்கியத்தின் முன்பு இந்தவெறும் வார்த்தைகளெல்லாம் நிற்கமாட்டா நாம் எவ்வளவு புண்ணியத்தைச்செய்தாலும் இவ்வுணவினால் அப்புண்ணியங்கள் அழிந்துபோய் விடுமென்று சொல்லக்கேள்விப் பட்டிருக்கிறேன். ஆகையால் நாமெல்லோரும் சுத்தவுணவு செய்கின்றவர்களென்று யாவரும் கொண்டாடும்படி நம்மில் இப்போது புலால் உண்பவர்களும் விட்டுவிட்டு இனிமேல் பிறக்குங் குழந்தைகளுக்கும் அவ்வுணவைப் பழக்கஞ் செய்யாமல் சுத்த சைவர்களென்ற பெயரையடைதல் வேண்டும். இவ்விஷயத்தை மட்டிலும் மேற்கொண்டு வந்தால் பல பெரிய புண்ணியங்களைச் செய்தவர்களாவோம். கொல்லாவிரதம் நல்ல பயன்றருமன்றோ! பெரியோர்களே! நீங்கள் இதில் கவனஞ்செலுத்தும்படி வேண்டுகிறேன்.

சேதுராமன்.
பவுண்டை.

## நெருங்கி விட்டன.

சைவசிகாமணிகளே!

இந்தமாசிமீ˜ கழிந்தவுடன் பல ஊர்களிலும் உத்ஸவங்கள் தோன்றிவிடும். அவைகட்குரிய மாசங்களும் மற்றையவைகளும் நெருங்கி விட்டன. தேவாலயங்களுக்கு முன்னோர்கள் ஏற்படுத்திய உத்ஸவங்களுக்குக்காரணங்களை நான் இப்போது விவரிக்கவில்லை. இந்நாட்டில் பலவிடங்களிலும்பலசிறு தேவதைகளுக்குப் பெரிய உத்ஸவங்களுக்குப்பின் பலியிடும் பூசைகள் நடைபெறுகின்றன. இக்கொலைப்பாவம் பிறர்களைச் சாராமலும் ஆடு கோழிகள் இன்புற்று உயிருடன் வாழவும் காரைச் சிவனடியார் திருக்கூட்டம் நல்லவேலைசெய்து வருகின்றது. அதுபோல் நம் நகரத்தார்கள் இருக்கு மிடங்களிலும் வேலைசெய்து பாபத்தினின்றும் நீங்கிச் சிவபுண்ணியத்தையடையும்படி யாவருக்குந் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அபிமானி.

## ஸ்ரீ மீனாக்ஷிபெண்பாடசாலை வருஷக் கொண்டாட்டம்.

சதாசிவ ஐயரின் மனைவியார் பேசிய பிரசங்க சாரம்.

சகோதர! சகோதரிகளே!!

நான் இங்குவந்து ஸ்ரீ மீனாக்ஷி பெண்பாடசாலையைக் கண்டு மிகவும் மகிழ்ந்தேன். உங்கள் முன்னிலையில் சில விஷயங்களைப் பேசலாமென்று நினைக்கின்றேன். செட்டு என்பதையே கைக்கொண்டு அதனால் செட்டியார்கள் என்ற பெயரடைந்த நீங்கள் "கணக்குப் பாராதபோனால் பிணக்குவரும்" என்பதை நன்கு கடைபிடித்து அதன்படியே செய்துவருகின்றீர்கள். நீங்கள் பரம்பரையாகவே தர்மங்களைச் செய்துகொண்டு வருகிறீர்கள். முற்கால முதல் நீங்கள் அமைத்து நடத்திவருகின்ற சத்திரங்கள் பாடசாலைகள் மடங்கள் முதலிய தர்மங்கள் எத்துணையோ பல இருக்கின்றன. அப்படிப்பட்ட நீங்கள் இந்தப் பெண்பாடசாலை போன்ற தருமங்களிலுங் கருத்தைச் செலுத்தி வருவது மகிழத்தக்கதே. முற்கால கருமங்களோடு இக்காலத்துக் கேற்ற முறையில் பள்ளிக்கூடம் ஆஸ்பத்திரி போன்ற பலதுறைகளிலும் உங்கள் பணத்தைச்செலவிட்டு வருதல் வேண்டும். புருஷர்களைப்போலவே பெண்களும் நன்றாகப் படித்து மேன்மையடைய வேண்டும். தேசம் முன்னேற வேண்டுமானால் பெண்களும் கற்று நன்றாக விருத்தியடைதல் அவசியமாகும். அவர்களோடு ஸ்தீரிகள் பிரசவ வைத்தியத்தையுங் கற்றுக் கொள்வது மிக நல்லது. நீங்கள் உங்கள் பழைய கைத்தொழில்களையும் சித்திர மெழுதல், தையல், பொம்மைசெய்தல் முதலியவைகளையுங் கற்றுக்கொள்ளலாம். முற்காலப்பெண்கள் பலதுறையினுஞ் சிறந்து நின்றார்கள் என்பதற்குப் பல உதாரணங்கள் காட்டமுடியும். மங்கையர்க்கரசி, சூடிக் கொடுத்தாள் போன்றவர்கள் பாண்டி நாட்டவர்களே! சமஸ்கிருத நூலைப் படித்த பெண்களும் பலர் இருந்திருக்கின்றனர். தருக்கம் கற்ற பெண்ணும் உபநிடதமறிந்த பெண்ணும் உயர்ந்த கணக்கைக்கரைகண்ட லீலாவதியும் இன்னும் இவர்களைப் போன்றவர்களும் பலர் உளர். வெள்ளிவீதியார் என்ற பெண் கடைச் சங்க நாளில் இருந்ததைப் பார்க்கும்போது அந்நாளில் பெண்கல்வி சிறந்து இருந்தது நன்கு விளங்கும். அந்நியநாட்டார் சிறுசிறு விளையாட்டுச் சாமான்களைச் செய்து நம்முடைய செல்வத்தைக்கொண்டுபோய் விடுகின்றபடியால் நாமும் அவைகளைச் செய்து பணத்தை இங்கே தங்கச் செய்யவேண்டும். உங்களில் ஆண்மக்கள் தனிமையாதல்முனிவிலதை முதலியஎட்டுக் குணங்களையும் உடையராய்ப் பெரும்பொருள்சம்பாதித்துவந்துஅளவுக்கு மிஞ்சின தருமங்களைச்செய்கின்றார்கள். அவர்கள் சம்பாதிக்கப் போகும் இடங்களான கொழும்பு, கண்டி, ரெங்கூன் முதலான இடங்களுக்கு நீங்களும் கூடவே செல்ல வேண்டும். இங்கு வந்தபின் சில விஷயங்கள் கேள்விப்பட்டேன். சிறிய பையனுக்குப் பெரிய பெண்ணைக் கல்யாணஞ்செய்விக்கின்றீர்களாம், அது பிசகு. அநுபவத்தில் நன்றாக நடக்கிறதென்று சொன்னாலும் அது பொருந்தாது. அனுபவத்தைச் சாஸ்திரத்திலும் வைத்து ஒத்துப்பார்க்க வேண்டும். கேவலம் அநுபவமட்டிலும் போதாது. இவ்விஷயத்தை அவசியம் கவனிப்பீர்களென்று நம்புகிறேன். மற்றும், கல்யாணங்களிலும் பெண்களுக்குத் தேவைக்கதிகமான பொருள்களை வழங்குகின்றார்களாம். அம்மி ஏழு ஆட்டுக்கல் ஏழு என்று கணக்குச் செய்வதில் என்ன பிரயோசனம்? ஸ்திரீகள் அதிகமாகப் படித்தால் இந்தக்குணங்கள் ஏற்படமாட்டா. சென்னையில் ஒரு கனவானின் பெண் மிக நன்றாகப் படித்து மேலான பரீக்ஷையில் தேறியிருக்கின்றாள். இந்நாட்டிலேயே பலவிடங்களில் நடைஉடைகளில் நாம்வேற்றுமைப்பட்டிருந்தாலும் அறிவிலும்மற்ற விஷயங்களிலும் வேற்றுமை சொல்ல முடியாது. நடை உடைகள் எல்லாம் வெறும் போலியே. சகோதரிகளே! நான் இதுவரையில்சொல்லிய விஷயங்களை ஆராய்ந்துபார்த்துத் தொடங்குங்கால் துன்பமாய்இன்பம் பயக்கும் மடங்கொன்றறி வகற்றுங் கல்வியைக் கற்று மேன்மேலும் உயர வேண்டுமென்று விரும்புவதுடன் நான் சொல்லியவைகளிற் குற்றங் குறைகளிருப்பினும் பொறுத்துக் கொள்ளும்படி கோருகிறேன்.



## ஸ்ரீ மீனாக்ஷிபெண்பாடசாலை வருஷக் கொண்டாட்டம்.

இதில் தலைமை வகித்த ஸ்ரீவான் பகதூர் ஸர்.டி. சதாசிவ ஐயரவர்களின் பிரசங்கசாரம்:—

நீங்கள் அன்போடு செய்த உபசாரங்களுக்கு வந்தன மளிக்கின்றேன். என்னைப் பல பாஷையுங் கற்றவனாக ஒருவர் உபசாரப்பத்திரத்தில் புகழ்ந்துசொல்லியிருக்கிறார்.என்னிடத்தில் அவ்வளவு அதிகமான கல்வி நிறைந்திருப்பதாக நினைக்கவில்லை. தமிழிலும் சாதாரணமாய்க் கொச்சையாகவே தான் பேசமுடியும். நீங்கள் இக்காலத்திற் கேற்றதர்மங்களைச் செய்ய முன் வந்ததற்குச் சந்தோஷம். பழங்காலத்தில் இராமேச்வரம் முதலான இடங்களுக்குப் போகும்வழியில் சத்திரங்கள் ஏற்பட்டிருந்தன. இக்காலத்தில் ரயில் ஏற்பட்டு விட்டபடியால் அவைகளால் அதிக நன்மை உண்டாகவில்லை. மேலும் அந்தமாதிரியான சில விடங்களில் பல தீமைகளும் நடக்கின்றன. நான் எதையுந் தைரியமாகச் சொல்லிவிடுவேனாகையால் நீங்கள் புதுக்கோயில்களை இனிக்கட்ட வேண்டாமென்று சொல்லுவேன். கோவில்களில்தற்போதுஉண்டாகும்விவகாரங்களையும் முக்கியமாக வைஷ்ணவர்களின் கோயில்களில் ஏற்படும் தீர்த்தப் பிரசாதச்சண்டைகளையும் கவனிக்கும்போது கொஞ்சமும் மனசுக்குப் பிடிக்கவில்லை. நான் உத்யோகம் பார்க்கும்போது இப்படிப்பட்ட விஷயங்களை கவனிக்கும்படி நேர்ந்தது முண்டு. ஆகையால் நீங்கள் தருமஞ்செய்வதில் புதியவழிகளில் முக்கியமாய்ச் செல்லவேண்டும். என் கொள்கைப்படி நீங்கள் சரியான வைசியர்கள் தாம். நான் ஜபதானஞ் செய்திருக்கிறபடியால் பிராமணனைவும் வைசியனைவும் இருக்கின்றேன். குணத்தினாலும் கர்மத்தினாலுமே ஜாதி என்பது எனது அபிப்பிராயம். உங்களில் சிலர் புது நாகரிகத்தில் ஈடுபட நினைக்கிறார்கள். அதனால் உங்கள் தர்மம் போய்விடுமோ என்று கவலைப்பட வேண்டியிருக்கிறது. இந்தப்பாடசாலைக்குக் கவர்ன்மெண்டிடம் கிராண்டைச் செட்டியார் ஏன்? வாங்கக்கூடாது. வாங்கி ஒரு புத்தகசாலையாவது போடலாமே. அப்படி வாங்குவதால் இவரை யாருங் குற்றஞ் சொல்லப் போகிறார்களா? அப்படிச் சொல்ல மாட்டாரென்றே நினைக்கிறேன். காலையில் குழந்தைகள் பேசும்போது எல்லாஞ் சொல்லிவிட்டார்கள். அவர்களுக்கு ஒன்று மாத்திரஞ் சொல்ல விரும்புகிறேன்: பிரசங்கஞ் செய்த பெண் குழந்தைக்கு ஒருவர், புருஷனைத் தெய்வமென்றே நம்பி யிருக்க வேண்டுமெனச் சொல்லிக் கொடுத்திருக்கிறபடியால் அப்படியே அக்குழந்தை பேசியது.

இவ்விஷயத்தில் திருவள்ளுவரைக்கூட நான் ஒப்பவில்லை. தேகபலம் முதலான சிலவற்றில் ஸ்திரீகளைக் காட்டிலும் புருஷர்கள் உயர்ந்தவர்கள்தாம். ஆனாலும் பெண்கள் அவர்களை அப்படியெல்லாம்மதிக்கவேண்டுமென்று சொல்லியது கர்வத்தாலேயன்றி வேறன்று. பாகவதத்தில் பெண்களைத் தூஷித் திருப்பது போலவே புருஷர்களையும் தூஷித்திருக்கிறது. இந்தக்காலத்தில் பெண்களை அப்படிச் சொன்னாலும் அவர்கள் கேட்கமாட்டார்கள். நீங்கள் பெண்களுக்குக் கீதையை நெட்டுருப்பண்ணுவிக்க வேண்டும். எனக்கு அதில் மிகப்பற்றுண்டு. அதையாரும் படிக்கலாம். இந்நூலைச் சைவர்களான என் நண்பர்கள் கூடப் பலர் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். நான் கீதையை முழுதும் பாடஞ்செய்து சொல்லுகிற ஒரு பள்ளிக்கூடத்துக் குழந்தைகளுக்கு வருஷந்தோறும் தங்க மெடலளித்துவருகின்றேன் இங்கும் செட்டியார் ஒப்புக் கொண்டால் கீதையைப் பாடஞ்செய்து சொல்லும் குழந்தைகளுக்கு மெடல் கொடுப்பதற்குத் தயாராக விருக்கிறேன் இப்பள்ளிக் கூடத்திலும் சம்ஸ்கிருதம் சொல்லிக் கொடுத்தல் வேண்டும். இக்காலத்தில் வடமொழியை யாவரும் நன்றாகப்படிக்க வேண்டுவது முக்கியமாகும். நாம்முன்னேறவும் பிறநாட்டாரால் நாம் சிறந்தவரெனக் கருதப்படவும் இத்தேச முழுவதுக்கும் பொதுவாக ஒரே புத்தகம் ஏற்படல் வேண்டும். இவ்விஷயத்துக்கு ஸ்திரீகளுஞ் சேர்ந்து வேலை செய்தல் மிக அவசியம். சிலவிடங்களிற் சில பெண்கள் கல்வி கற்பதைச் சீக்கிரம் நிறுத்தி விடுகிறார்கள். ஆனால் இப்போது சென்னை முதலிய இடங்களில் பல பெண்கள் B. A. முதலிய பரீக்ஷைகளில் தேறி வருகின்றனர். இந்நாட்டிலுள்ள பெண்கள் சீக்கிரம் படிப்பை நிறுத்தி விடுகிறார்களாம். அவ்விதம் நிறுத்தக்கூடாது. கல்யாணஞ்செய்யும் வரையில் படித்து வரலாம்வேண்டுமானால் அவயதுக்கு மேற்படப் படிக்கவேண்டாம். எங்களைப் பார்த்து சிலர் கெட்டுப்போகின்றனர் ருதுவானபின் செய்யலாமென்றிருக்கும்போது ஏன் சிறு வயதில் செய்யவேண்டும்? சென்னையில் அநேக பிராமணர்களும் நானும் அப்படித்தான் செய்து வருகிறோம். எதைச்செய்தால் தேசக்ஷேமமுண்டாகுமோ அந்தக்காரியத்தைச் செட்டியார் செய்து புண்ணியத்தைக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

## கட்டுப்பாடு கடத்தல்.

புண்ணியஞ்செய்தால் மோக்ஷத்தையும் பாபஞ்செய்தால் நரகத்தையும் அடைதற்கு உரிய மானிட ஜன்மத்தைப்பெற்ற நமக்கு, வேதங்களாலும் சாஸ்திரங்களாலும் பெரியோர்களாலும் பல வகையான நெறிகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. அந்நெறியைக் கடந்து நடத்தலே கட்டுப்பாடு கடத்தலாகும். இந்தக்கட்டுப்பாடுகள் ஒவ்வொரு தேசங்களுக்கேற்றபடியும் ஒவ்வொரு ஜாதிகளுக் கேற்றபடியும் அமைந்து கிடக்கும். ஜாதிக்கட்டுக்கு அடங்கி நிற்பவனே தேசக்கட்டுக்கும் ஒத்து நடப்பான். ஒருவன் தன்னுடைய ஜாதியில் ஏற்படுத்தியிருக்கிற கட்டாகிய சட்டத்துக்கு மீறுவானேயானால் அவன் அந்த ஜாதியினால் தண்டிக்கப்படவோ அல்லது விலக்கப்படவோ உரியனாவன். ஒரு ஜாதி முழுதுங்கூடிச் செய்யுந்தீர்மானத்தை மனிதர்கள் செய்ததாக நினையாமல் தெய்வம் செய்ததாகவே நினைத்தல் வேண்டும். அவ்வெண்ணம் எவருக்கு வரவில்லையோ அவரே கட்டைக் கடந்து நிற்க முயல்வர் சிலர். செல்வப்பெருக்காலும் பொய்மையாலும் பிறவழிகளாலும் மற்றவர்களுக்குத் தெரியாதபடி மீறிநடந்தால் அவர் நிச்சயமாய்த்தெய்வ தண்டனைக்கு உள்ளாவர் சிலர்கள் கட்டுக்கடங்காமல் பல காரியங்களைச் செய்துகொண்டும் தெய்வதண்டனையை யடையாமலும் சுகமாக விருப்பதைக்காணும்போது நாம் அவரைத் தெய்வந் தண்டிக்கவில்லையே என்று இகழ்ந்து கூற முடியாது; ஏனென்றால் மனிதர்கள் அறிந்து ஒருவித முடிவு செய்கிறார்களா? இல்லையா என்று தெய்வங் கவனித்துக்கொண்டு நிற்கும்போது தான் அவர்கள் சுகவாழ்வு பெற்றிருப்பதாகக் கருத இடமுண்டாகிறது. குற்றஞ் செய்தவர்கள் மனிதர்களுக்குத் தப்பினின்றபிறகு தான் தெய்வந்தண்டிக்க முயலும். தெய்வ தண்டனைக்காளானவர் மக்களாலும் தெய்வத்தாலும் தள்ளப்படுகிறார். குற்றத்தை ஒப்புக்கொண்டு மனம் வருந்திப்பெரியோர் சொற்படி நடப்பின் அவர் மக்களாலும் தெய்வத்தாலும் காக்கப்படுகின்றார். அறிவுடைய மக்கள் இவ்விஷயங்களை நன்கு அறிந்து செய்ய உரியராகின்றார். என்றுசொல்ல வேண்டியதில்லை கட்டுபாடு என்பது உலகசுகத்துக்கும் அதன்வழியாக ஆத்ம சுகத்துக்கும் ஏற்படுவதேயன்றி விளையாட்டுக்காகச் செய்யப்படுவதில்லை. இவ்வுண்மையை யறியும்போது தான் கட்டுப்பாட்டில் அன்பும் அதன்படி நடக்கும் எண்ணமும் உண்டாகின்றன. பாரபக்ஷமான எண்ணமும் அகங்காரமும் அவைகளைத்தோன்றாமற்றடுக்கும். ஆகையால், ஒவ்வொருவரும் தம் தம் ஜாதிப்பெருமையையும் அவைகட்கு ஏற்பட்டுள்ள அரிய பெரிய நெறிகளையும் அறிந்து நடக்க முயல வேண்டுமென்று கோருகின்றோம்.

ஒரு நிருபர்.

## வைசியர்வேண்டுகோள்.

(அகவற்பா)

காரைப் பதியிற் கனமுள ஊழியன்
பேரை காட்டவே பிரியமா யெண்ணி
ஒவ்வொரு நண்பரும் உண்மை யுற்று
ஒவ்வொரு ஊர்க்கும் ஊக்கமாய்ச்
சென்றுநற்
சீர்பெறத் திருத்தம் செய்த பின்னர்ப்
பார்புகழ்க் கோவி லூரினிற் பண்பாய்
தொண்ணூற்றூறார்க் கூட்டமும்
சூழ்ந்து
திண்ணமாய்க் கூடிச் செய்த தீர்மானம்
யாவரும் புகழ நன்றாய் நடந்தது;
தேவையை யெண்ணிச் சீர்கெடச் செய்
தால
மாகத விநாயகர் வாட்டுவா ரவர்களை
ஈக வேதனை நாடொறுங் கிட்டும்
ஆதலா லனைவரும் அகமதி லெண்ணி
தீதறச் செய்வீர் தீர்மா னங்களை
நச்சாந்து பட்டியில் ராமன் செட்டியார்
அச்சமாய்ப் போலீஸ் ஆட்களைக்
கொண்டு
நடத்திய விவாகம் நவிலவொண்ணுது
கடந்து செய்வதாய்க் கண்டனர் வாலிப
சங்க, மணிகள் சார்ந்தே அங்கு
இங்கித வார்த்தை களிதமாச் சொல்லவே
மங்கையர் பலரும் வந்தே கூடினர்
சந்தையைப் போலச் சற்று நேரத்தில்
வந்து நிறைந்தனர்வணிகர் பலரும்
மந்தையில் நன்றே வாலிப நண்பரும்
புழுதி புரளவே பூமியிற் படுத்துப்
பழுதிலாச் செய்தி பகரவேயிராப்பகல்
மீறி நடத்திய விநோத விவாகம்
கூறியபத்ரிகைகொண்டோர் பொறுக்கார்
வேலிபயிரை வேகமாய்த் தன்பது
வாலிப சங்க மணிகளு மறிந்து
செய்த வேலையைச செகத்தினர்
அறிவார்
ஊக்கம்விடாது உண்மைப் படியே
நகர முறைப்படி நன்கா ராய்ந்து
விகசித மாக விரைவினிற் செய்வீர்
மெதுவா யிருந்தால் மேவிடுங் குப்பை
ததியிது பாரும் சற்குண வணிகரே

சோமசுந்தரம்.
கொழும்பு.

---

## தொண்ணூற்றூறார்க் கூட்டத்தில் தீர்மானிக்க வேண்டிய விஷயங்கள்.

பங்குனியில் கூடப்போகும் கூட்டத்தில் தீர்மானிக்கப் படவேண்டிய விஷயங்களில் சிலவற்றைக் கீழே குறிப்பிடுகின்றேன் அவையாவன:—

முதலாவதுபெண்ணுக்குக் கல்யாணச் செலவுக்காக ௫000 ரூ வாங்கலாம் என்று தீர்மானிக்கப்பட்டிருக் ... வில்லை. ஏனென்றால் அடுத்த கூட்டத்தில் தொகையைக் கூட்டுவார்கள் என்று நினைக்கிறார்கள். ஒரு விதவை ஒரு பையனை மாத்திரம் வைத்துக்கொண்டு பணமும் இல்லாதிருப்பாளேயானால் கல்யாணம் செய்ய மிகவும் கஷ்டப்படும். சிலர், பணம் சம்பாதித்துக் கொள்ளலாம் என்கிறார்கள். கல்யாணத்திற்காக அதிகப்பொருள் சம்பாதிக்க வயது ௨௱க்கு மேலாகும். முதலிற் கடனை வாங்கிச் செய்து கொண்டால் அதன்மேல்கல்யாணம் செய்துகொள்ளவாங்கிய அந்தக்கடனைத்தீர்க்கவும் சாப்பாட்டுக்குச்சம்பாதிக்கவும் தொலைக்குச்செல்ல நேரிடும். ஆகையால் நகரத்தார் அனைவரும்யோசித்துத் தொகையைக்கூட்டமாட்டார்களென்றுநம்புகிறேன்.

இன்னும் இத்தீர்மானம் நிலைப்பதற்கு இப்பொழுது ருதுவாயிருக்கிற பெண்களை எல்லாம் ஒரு வருஷத்திற்குள்ளும், இனி மேலாகும் பெண்களை ஒரு வருஷத்திலாவது ஆறு மாதத்திற்குள்ளாவது கல்யாணம் செய்வதென்றும் தீர்மானிக்க வேண்டும்.

இரண்டாவது சீர் கொடுப்பதில் அதிகமாகக் கொடுத்தலால் ஒருவித மான பிரயோஜனமும் இல்லை. ஆனால் நமது பெண்கள் கேட்கமாட்டார்கள். அதற்குவைத்த சாமானைப் பெண்ணுக்கு ஏதாவது நேரிட்டால் திருப்பி வாங்கிக்கொள்வதில்லை என்றும் தீர்மானிக்க வேணுமாறு உங்களைப் பன்முறை பணிவுடன் கேட்டுக்கொள்ளவதோடு நமதுஜாதியைப் புனிதப்படுத்துமாறும் வேண்டிக் கொள்கிறேன். இதற் கெல்லாம் மரகத விநாயகர்திருவருள் நம்முன்னே நிற்கிறது. நமது சமூகம் நீடூழி வாழ்க!

அ. தே. மு. மு. அருணாசலம்
காரைக்குடி.

## தொண்ணூற்றூறார் நகரத்தார்கட்கு ஓர் வேண்டுகோள்.

அன்பார்ந்த ஐயன்மீர்! தெய்வ சபையை யொத்த நம் நகரசபையானது இவ்வருஷம் ஆனிமீ கூடிமுக்கிய தீர்மானஞ் சிலவற்றைச் செய்தது. சமூகாபிமானமுள்ள உத்தமர்கள் பலர் அதற்குக் கட்டுப்பட்டு நடந்தும் மற்றவர் களையும் அதைப்போல் நடக்கும்படி தூண்டியும் வந்தார்கள். ஆனால் சில பிற்போக்கானவர்கள் அதன்படி நடப்பது சிரமசாத்தியமெனச்சொல்லினர். அதை நச்சாந்துபட்டி இராமஞ் செட்டியார் நடத்தையிற்காண்பித்து விட்டார். இன்னும் சிலரும் மீற நினைப்பதாக அறிகிறோம். இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கா... கூடவேண்டியதொண்ணூற்றூறார்க் கூட்டத்தைப் பங்குனிமீ கூட கூட்டிவைப்பதாக ஒவ்வொரு ஊர்கட்கும் பிரசாரத்திற்குச் சென்று வந்து கொண்டிருக்கிறார்கள். எவ்விதமும் குறிப்பிட்ட தேதியன்று கூட்டம் நடைபெறுமென்பது திண்ணம். ஆனால் பெண்ணுக்கு அதிகப்பணம் வாங்க விருப்பமுள்ள சிலர் கூட்டத்திற்குப் போக வேண்டாமென்று கெஞ்சிக் கேட்க ஆரம்பிப்பார்கள். சமூக அபிமானிகளெல்லாம் நம் சமூகம் பழைய பெருமையையடைய வேண்டும். இந்த நாட்டிற்குத் திலகமாய் விளங்கவேண்டும். இவ்வமயம் கூடாமலிருந்து விடுவோமானால் சமூகமே உருமாறிவிடும். என்பவைகளை மனத்தில் நினைந்து ஒவ்வொருவரும் கூட்டத்திற்கு அவசியம் விஜயம் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இம்முறை நடைபெறும் கூட்டத்தில் சுற்றஞ் செய்தவர்கட்கு விதாயஞ் செய்வதோடு தீர்மானங்கள் நிலைப்பதற்கேற்ற சில உதவித தீர்மானங்களையும் செய்ய வேண்டும். தீர்மானப்படி பெண்ணுக்கு ரூபாய் ௫ஆயிரம் வாங்கினால் கல்யாணச் செலவுக்குப்போதவில்லை யென்று சொல்கின்றனர். உண்மையில் போதவில்லை தான். அதற்காக இன்னும் தொகையைக் கூட்டிவைக்கும்படி யான் கூறவில்லை. ஆனால் கல்யாணச் செலவு குறைந்தால் தீர்மானப்படி நடக்கும் என்று நினைக்கின்றேன். கல்யாணத்தில் ௩௯ அடுக்கு வைக்கலாமென்று தீர்மான மாயிருக்கிறது. பலர் உள்ளன்போடு வைத்தாலும் சிலர் பெயருக்கு வைப்பதாகவே தெரிகிறது. பொருளுள்ளவர்கள் தீர்மானப்படி வைக்கலாம். வாங்கிச் செப்பவர்கள் சக்திக்குத் தக்கபடி வைப்பதுதான் முறை. ஆனால், பெண்ணுக்கு ஸ்ரீதனம் கொடுக்கும் சாமான்கள் முதலியன எந்தக்காலத்திலும் மாப்பிள்ளை வீட்டாரையே சேர்ந்துவிடும் என ஓர் தீர்மானம் செய்துவிட்டால் வாங்கிச் செய்பவர்கள் அளவோடு நின்று விடுவார்கள். அதனால் கல்யாணத்திற்கு இவ்வளவு செலவு வராதெனப் பலர் எண்ணுகின்றனர். அவ்விதஞ் செய்வதோடுபெண்களுக்கு இன்னகாலத்திற்குள் விவாகஞ் செய்துவிட வேண்டுமென்ற திட்டத்தையும் ஏற்படுத்தியிட்டால் தீர்மானம்உறுதி பெறுவதோடு கல்யாணங்களும் தவக்கமன்னியில் நடைபெறுமென நினைக்கின்றேன்.

அன்பறிவான்ற பெரியீர்! மேற்கண்ட விஷயங்களை யோசித்து உங்கள் மனத்துக்கு உசிதமெனத் தோன்றினால் அவ்விதம் தீர்மானிக்கும்படி உங்களைக்கேட்டுக்கொள்...




## பெரியகம்பெனி! நாணயமானசாக்குகள்!

திருப்தியில்லாத சாக்குகள் நருமை பெற்றச் சுத்தமான பட்டு, சகாயவிலை, புதுமாதிரியான பட்டு புடவைகள், ரவிக்கைகள், சால்வைகள், வெண்பட்டு, வேஷ்டிகள், தாவணிகள், மலையாளத்து முண்டுகள் முதலிய எல்லாப்பட்டு தினுசுகளும் கிடைக்கும். எந்தப்புதுமாதிரியும் செய்து அனுப்பலாம்.

புடவைகள் 20-முதல் 250-ரூபாவரை கிடைக்கும். வெண்பட்டு வேஷ்டி 10-க்கு 6-ஜோடி 20-முதல் 35-ரூபாய் வரையும் 9-க்கு 6-ஜோடி 18-முதல் 30-ரூபாய்வரை மற்றும் எல்லாவிவரங்களுக்கும் கேட்லாக் தருவித்துப் பார்த்துக்கொள்ளவும்.

கேட்லாக்இனாம்!

Manager
SILK PITHAMBER Co.,
Benares (City)

விலாசம்
மானேஜர்
பட்டுப் பீதாம்பர்கம்பெனி
காசி

## Swadesi Steel Trunk Manufacturing Co.,

75. North Main Street, Tanjore.
Tel. Address. "TRUNKS"

Registered,
Trade Mark.

நாணயமும், நயமும், உறுதியுமானவை.
ஒரு முறைநம்மிடம் வாங்கி பரீக்ஷித்துப்பாருங்கள்.

நேர்த்தியான நய எஃகு தகட்டினால் தயாரிக்கப்பட்ட டிரங்குப்பெட்டிகள், கைப்பெட்டிகள் உடுப்புப்பெட்டிகள், நகைப் பெட்டிகள், தஸ்தாவேஜிப்பெட்டிகள், ஆபீஸ் பெட்டிகள், சமீபப் பிரயாணக் கைப்பெட்டிகள் நல்ல அழுத்தமானதும் 4-லீவர் பூட்டுகள் தைத்து தேக்கம் சக்கையில் பதித்த உருளைகளுள்ளதும் அழகிய வர்ணம் தீட்டப்பட்டதும், ஆபீஸர்களுக்கும் வியாபாரிகளுக்கும் பிரயாணிகளுக்கும் உபயோகமுள்ளவை.

மில்களுக்கு உபயோகமுள்ள ஹால்வர் பேரிங்குகள்,
இஞ்சின் பேரிங்குகள், லிவேர் டக்கெட்டுகள்,
மோட்டார் பெயிண்டுகள் பேரிங்குகள்.

ஆபீஸ்களுக்கும் ஆபீஸர்களுக்கும் மிக்க உபயோகமுள்ளதும் அமைந்தமான துமான கை லாந்தர்களும் வார்ப்பிட பித்தளை மெழுகுவத்தி விளக்குகளும் பலமாதிரி பூட்டுகளும்,மற்றுமுள்ளவார்ப்பிட்ட வேலைகளையும் செய்து கொடுக்கக்கூடிய இடம் இதுவே.

எல்லாவிபரங்களுக்கும் ஆபீஸுக்கு எழுதித்தெரிந்துகொள்ளலாம்.
கேட்லாக்இனாம். மானேஜர்,

M. V. R. CHETTYAR.
Proprietor,

ராம. அடைக்கப்பசெட்டியார்,
ஸ்வதேசி ஸ்டீல் டிரங்குகம்பெனி
75, வடக்குராஜவீதி, தஞ்சாவூர்.

## நாட்டின் வறுமை நீங்கிவிட்டது.

நமது தேச முன்னேற்றத்திற்கு இன்றியமையாத கைத்தொழில்கள், வியாபார தந்திரங்கள், இரசாயன அற்புதங்கள், ஆச்சரியமான (Magic) ஜால வேடிக்கைகள், மந்திர தந்திர இரகசியங்கள், சன்மார்க்க விஷயங்கள் (மெஸ்மெரிஸம்) மனோவஸ்ய உண்மைகள், கைத்தொழில் சம்பந்தமான வினாவிடைகள், முதலிய அரிய பல விஷயங்கள் மிகவும் எளிய நடையில் எழுதப்பெற்று நமது "மாயாவி" என்னும் மாதாந்திர தமிழ் சஞ்சிகை வெளிவந்து விட்டது! இந்தியாவின் வறுமையும் நீங்க ஆரம்பித்து விட்டது!! இதன் வருஷ சந்தா ரூ 3—8—0 தான். வெளிநாடுகளுக்கு ரூ 4—0—0. தனிப்பிரதி அணா 6. இச்சஞ்சிகையின் முழு நோக்கமும் தேசமுன்னேற்றத்திற்கேயாதலால் இன்றே தாங்களும் சந்தாதாரராய்ச் சேருங்கள்.

தந்தி விலாஸம்,
"Magician"
புதுக்கோட்டை.

விலாஸம்:—மானேஜர்,
"மாயாவி" ஆபீஸ்,
புதுக்கோட்டை திருச்சி.

பார்த்தீர்களா!
சமூக சம்பந்தமாய்
வெளிவந்துள்ள
இரண்டுநாவல்களை

உண்மையையும் ஊக்கத்தையும் உத்ஸாகத்தையும் உணர்ச்சியையும் உண்டாக்கத்தக்க அநேக விஷயங்கள் நல்ல அனுபவ சாலிகளால் பழைய நூல் ஆதாரங்களைக் கொண்டு எழுதப்பெற்று விரைவில் வெளிவரும்.

இரண்டு
புதிய நாவல்கள்.

பர்மா நாட்டுக் கோட்டையார் சங்கக்காரியதரிசி ஸ்ரீமாந் சு.பழநியப்பா அவர்களால் பதிப்பிக்கப் பெற்றவை.

சமூக சம்பந்தமான நாவல்கள்
பத்மநாதன் அல்லது களவுபோன வைரப் பதக்கம் 1—4—0
சுவீகார புத்திரன் 0—12—0
தபாற்கூலிவேறு

வேண்டுவோர் அடியிற்கண்ட விலாசத்திற்கெழுதிப் பெற்றுக் கொள்க.

சு. பழநியப்பா அவர்கள்
கடியாபட்டி,
இராமச்சந்திரபுரம்.

## தபால் தந்திமித்திரன்.

(இரண்டாம் பதிப்பு.) விளம்பரம்.

நேயர்களே நமது கம்பெனியில் பிரசுரித்த முதலாவது பதிப்பு முற்றிலும் விற்பனையாகி இரண்டாம் பதிப்பு அச்சில் இருந்துகொண்டிருக்கிறது. முந்தின பதிப்பிலிருந்தும் இதில் நம்மவர்களுக்கும் சாதகமான விசேஷ சமாசாரங்கள் சேர்க்கப்பட்டும் பினாங் சிங்கப்பூர் சிலோன் பர்மா இந்தியா முதலிய இடங்களின் தபால் தந்தியாபீஸ்களைக் கூட்டியும் பின்னிட்ட நடப்புவட்டி தவணைவட்டி விபரங்களையும் சேர்த்தும் வியாபாரிகளுக்கும் சாதகமான முறையில் இனைய விபரங்களுடனும் அமைக்கப்பட்டு ஸ்ரீ முருகப்பிரானுடைய திருவுருவப்படமும் சேர்க்கப்பட்டிருக்கிறது. சொற்பபிரதிகள்தான் தயாராகிறபடியால் தேவையுள்ளவர்கள் வி. பி. மூலம் அனுப்பிவைக்கு மாறு முன்னதாகவே ஆர்டர்செய்யும்படி கேட்டுக்கொள்கிறோம். கூடிய சீக்கிரம் வந்துவிடும்தவக்கமன்னியில்வரும் ஆர்டர்களைக் கவனித்து அனுப்பிவைக்கப்படும்.

வைசியநேசன் கம்பெனி
தபால் பெட்டி நெர், 251
57மெர்ச்சண்ட் வீதி, ரெங்கூன்.


---

## தனவைசிய ஊழியன், சந்தா விபரம்.

| | |
|---|---|
| இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு ரூ ஒன்றுக்கு ... | ௩—0—0 |
| சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்குரூ ஒன்றுக்கு | ௪—0—0 |
| தனிப்பிரதி ஒன்றுக்கு ... | 0—௨—0 |

மானேஜர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்.
காரைக்குடி.

# விளம்பரம்.

## காரைக்குடி-அறந்தாங்கி இருப்புப்பாதை

போடும்

## மதராஸ்புரொவின்ஷியல் ரெயில்வேகம்பெனி, லிமிடெட்,

# திருச்சினப்பள்ளி.

(இது 1913-ம் வருஷத்திய இந்தியன் கம்பெனிஸ் 7-வதுஆக்டேப்படி ரிஜிஸ்தர் செய்யப்பட்டது.)

இந்தியா கவர்ன்மெண்டாருடைய உத்திரவுப்படி நடைபெறும்.

**மூலதனம் ரூ 12,00,000.**

அதாவது

பங்கு 1-க்கு ரூ 100 வீதம் 12, 000 பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

பங்குத்தகையை மனுவுடன் பங்கு 1-க்கு ரூ. 10-ம், பங்கு கொடுத்தபிற்பாடு பங்கு 1-க்கு ரூ. 15-ம் மிச்சத்துகையை கேட்கும்போது மூன்று வாய்தாவில் வாய்தா 1-க்கு ரூ. 25 வீதம் மாதாமாதம் செலுத்தவேண்டியது. பங்குக்காரர்கள் இஷ்டப்பட்டால் பங்குத்துகையை ஒரேகாலத்தில் பூராவாகவும் செலுத்தலாம்.

சங்கத்தில டைரக்டர்கள்.

1. மகா-ா-ஏ-ஸ்ரீ திவான் பகதூர் சா ரும மு சித பெத்தாச்சி செட்டியார் அவர்கள் M R A S, பாங்கர், ஆண்டிப்பட்டி ஜமீந்தார், திருச்சினப்பள்ளி. சேர்மென் அண்ட் பைனன்ஷியர்.
2. ,, கனம் கொடியாலம் வாசுதேவ ரெங்கசாமி அய்யங்கார் அவர்கள், மிராசுதார், திருச்சினப்பள்ளி ஜில்லா இந்தியா ஸ்டேட் கவுன்ஸில் மெம்பர், வைஸ்—சேர்மென்.
3. ,, மெ. அரு. நா. இராமநாதன் செட்டியார் அவர்கள், பாங்கர், தேவகோட்டை, டைரக்டர்
4. ,, றம. மெ. சித. வைரவன் செட்டியார் அவர்கள், பாங்கர், தேவகோட்டை, ,,
5. ,, அள. அரு. நாராயணன் செட்டியார் அவர்கள், பாங்கர், தேவகோட்டை, ,,
6. ,, பள. அ. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள், பாங்கர், தேவகோட்டை, ,,
7. ,, A. R. S. V. காசிவிஸ்வநாதஞ் செட்டியார் அவர்கள், பாங்கர் நாட்டரசன்கோட்டை, ,,

செக்ரிடெரி.

மகா-ா-ஸ்ரீ N. கிருஷ்ண ராவ் அவர்கள், ரெயில்வே அபிவிர்த்திக்காரர், திருச்சினப்பள்ளி.

ஆடிட்டர்.

மகா-ா-ஏ-ஸ்ரீ T. C. ஸ்ரீனிவாச அய்யங்கார் அவர்கள், BA, பென்ஷனராகிய கவர்ன்மெண்டு & ஸ்டேட் ரெயில்வே அக்கவுண்டெண்ட், திருச்சினப்பள்ளி

கன்ஸல்டிங் இன்ஜினீர்.

H. W. பேர்ரி துரை அவர்கள், ரிடையர்ட் கவர்ன்மெண்ட் & ரெயில்வே எக்ஸிகியுடிவ் இன்ஜினீர் & பெர்ஸனல் அசிஸ்டெண்ட் டிராபிக் மானேஜர், S. I. Ry., திருச்சினப்பள்ளி.

பாங்கர்.

திருச்சினப்பள்ளி டிஸ்திரிகட் அர்பன் பாங்கு, லிமிட்டேட்., திருச்சினப்பள்ளி.

சொலிஸிட்டர்.

மகா-ா-ஏ-ஸ்ரீ V. சேஷய்யர் அவர்கள், பி. ஏ. பி. எல்., ஹைக்கோர்ட்டு வக்கீல், திருச்சினப்பள்ளி

பங்குகள் சேகரிக்கும் பிரதான ஏஜன்வாசர்.

மகா-ா-ஏ-ஸ்ரீ S. சீனிமுருகப்பிள்ளை அவர்கள், இராமநாதபுரம் டிஸ்திரிக்ட் போர்டு மெம்பர், சிவகெங்கை.

ரிஜிஸ்தரான ஆபீஸ்:—புத்தூர், திருச்சினப்பள்ளி.

1 ரூபாய் 8 லட்சத்திற்கு ஏற்கனவே பங்குகள் உள்நாட்டில் பேசி முடிவாகியிருக்கிறது. இனி 4,000 பங்குகள்தான் பாக்கியிருக்கிறது.

2 பங்குகள் எடுத்துக்கொள்ள விருப்பமுள்ளவர்கள் அதற்காக ஏற்பட்டிருக்கும் மனு பாரத்தில் எழுதி விண்ணப்பஞ் செய்துகொள்ளவேண்டியது. அம்மனு பாரங்கள் கம்பெனியின் செக்ரிடெரியிடமிருந்தாவது பங்கு சேகரிப்பவர்களிடமிருந்தாவது பெற்றுக்கொள்ளலாம். கம்பெனியின் நிபந்தனைகளின்படி எல்லாப்பங்குத் துகைகளையும் ரொக்கமாய் திருச்சினப்பள்ளி புத்தூரிலிருக்கும் கம்பெனியின் சேர்மன் அவர்கள் பேருக்கு அனுப்பவேண்டியது. அவர்அதற்கு ரசீது கொடுப்பார். ஆனால் பங்குஎடுத்துக்கொள்பவர்களின் சவுகரியார்த்தமாக துகைகளை பங்கு சேகரிப்பவர்களிடம் செக்கு மூலியமாகவாவது உண்டியல் மூலியமாகவாவது செலுத்தி அவரிடமிருந்து டெம்பரரி ரசீது பெற்றுக்கொள்ளலாம். அப்பேர்ப்பட்ட செக்குகள், உண்டியல்கள் கம்பெனியின் சேர்மனிடம் வந்ததும் அவர் கம்பெனியின சரியான ரசீதை அனுப்புவார்

3 இக்கம்பெனியின் சட்டநிபந்தனைகள் வேண்டுவோர் கம்பெனியின் செக்ரிடெரியிடமிருந்தாவது அல்லது பங்கு சேகரிப்பவர்களிடமிருந்தாவது 8 அணா செலுத்திப் பெற்றுக்கொள்ளலாம். பிரகடன [Prospectus] பத்ரம் இனாமாய்க் கொடுக்கப்படும்.

சா. ரும. மு. சித. பெத்தாச்சி செட்டியார்,
சேர்மன்,
மதராஸ் புரொவின்ஷியல் ரெயில்வே கம்பெனி, லிமிட்டேட், திருச்சினப்பள்ளி.

சொ. முருகப்பசெட்டியாரவர்களால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப் பிரசுரஞ் செய்யப்பெற்றது.

